சிவமயம்.

# திருக்குறள் முதற்பாவின்

## பரிமேலழகருரை விளக்கம்.

இதனை

ஆயுர்வேத பண்டிதர்

பாண்டேச்சுரம் - வேங்கடஸாமி தேவரவர்கள்

குமாரர்

பா. கங்காதரதேவரவர்கள்

தொகுத்து

மசனனை :

பிரஸிடென்ஸி அச்சுக்கூடத்தில்

பதிப்பித்தனர்.

1909.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.



சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதரும்
மஹாமஹோபாத்தியாயருமாகிய

## ப்ரஹ்மஸ்ரீ. உ. வே. சாமிநாதையரவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முப்பாலின் முதற்பாலிற் கிணையில்பரி மேலழகர்
மொழிந்த வின்ப
வைப்பாய வுரையதனுக் கொருவிளக்க மியற்றியன்பின்
வழங்கி னனால்
எப்பாலும் புகழ்பாண்டேச் சுரம்வருவேங் கடசாமி
யீன்ற மைந்தன்
துப்பார்வெம் பிணிப்பகைஞன் தூயகங்கா தரப்பெயர்கொள்
சுகுணன் தானே.



கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

## உ. வே. வை. மு. சடகோபராமாநுஜாசாரியரவர்கள்

[illegible]ய

நேரிசையாசிரியப்பா.

பாலிற் சிறந்த பசுவின் பால்போ
னூலிற் சிறந்த வள்ளுவர் நூலி
னுரையிற் சிறந்த பரிமே லழக
ருரையின் கருத்தி னுண்மை புலப்படச்
சித்தாந்த சைவச் சத்தாம் பொருள்தழீஇ
முதற்குறட் பாவின் முதிர்பொருள் விளக்கி
முதற்பா வலர்செய் முதற்பா நூலின்
முதற்பா விற்குள முதன்மை தெரித்தனன்
பண்டித னென்று பகரப் பெறும்பெய
ரிருவகை யாற்றனக் கேற்கும் வண்ண

மிலக்கிய விலக்கணக் கலைக்கட லுடனே
யாயுள்வே தப்பொரு ளாய்ந்துண ரறிஞன்
நூலா சிரியருந் தேவ ரந்நூ
லுரையா சிரியரி லுயர்ந்தவர் தாமுமோர்
பூதேவ ரவ்வுரைப பொருள்விளக் குநரு
மோர்தேவ ராதலே யுரிய தென்னுந்
தகுதி தனக்கு மிகுதியா வாய்ப்ப
அப்பெயர் மரபினு லமையப் பெற்றோன்
தன்குடிக் குரிமையாற் றனக்கும் வழங்குமத்
தேவ னெனும்பெயா மேவிநனி சிறப்பப்
பலவகை நூலுணர் புலவ னாகிச
சாவா மருந்து வழங்கும் பெருந்தகை
வாயுறை வாழ்த்தி னுள்ளுறை யுரைத்தற்
கேற்புடை யவனிவ னெனவென யாவரு
மதிக்கும் வண்ணம் வாயுறைத தேர்ச்சி
தொன்றுதொட் டுடைய நன்றறி வள்ளல
அன்பரு ளடக்கமொப் புரவுகண் ணோட்டம்
வாய்மை தூய்மை வகைபல வாய்ந்த
மங்காத சீர்த்தி மலிந்த
கங்கா தரனெனுங் கவிவல லோனே.

---

## மஹாவித்வான் கா-இராமசாமிநாயுடு அவர்கள் இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உத்தரவே தத்தின்முதற் பாப்பரிமே லழகருரை
விளக்க வொண்ணூல
இத்தரையோ ரையமற வினிதினியற் றித்தந்தா
னினிய பாவின்
அத்திவரு தந்வந்த்ரி யாதியர்நூன் முழுதுணர்வேங்
கடசாமிப்பேர்
வித்தகன்கான் முளையாங்கங் காதரப்பேர்ப் பிடூகர்பிரான்
விழைவி னுய்ந்தே.

சிவமயம்.

# முகவுரை.

அநாதி முத்த சித்துருவாய் "எல்லாப்பதார்த்தமுமா யெங்கு நிறை யொன்றை முனனூல், சொல்லாப் பதார்த்தத்தைத் துப்புர வை - வல்லார்கள், கூடற் பதார்த்தத்தைக் கொண்டேத்தி" யான் இயற்றமிழ்ப்பாடங்கோடற்கெழுந்து, அஷ்டாவதானம் - வீராசாமி செட்டியாரவர்கள் மருகரும், சென்னை - தொண்டைமண்டலம் துளுவவேளாளர் இயற்றமிழ்ப் போதனாசாலைத் தமிழ்ப் பண்டி தருமாகிய அப்பன்செட்டியாரவர்களிடத்து, தெய்வப்புலமைத் திரு வள்ளுவநாயனார் அருளிச்செய்த திருக்குறள் பாடங்கேட்டுவருகை யில், அந்நூலின் கடவுள்வாழ்த்துள் முதற்பாவுக்குப் பரிமேலழ கர் இயற்றிய உரைவிசேடத்தில "அகரத்திற்குத் தலைமை விகா ரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதி பகவற்குத் தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கையுணர் வான் முற்றுமுணர்தலானுங் கொள்க" என்னும் வாக்கியத்தில் உள்ள வினையெச்சங்களாகிய 'அன்றி' என்னுஞ் சொற்களாற் போ ந்த பொருட்கண்ணதாகிய ஐயம், அக்காலங்களில் அத்திருக்குற ளின் முதற்பாவைப்பற்றிச் சில மதஸ்தர்கள் செய்துவந்த உபந் நியாசங்களானும், ஒருவரோடொருவர் வாதிட்டுத் தமக்குள்ள கல்வி யறிவுகளின் திறத்தைக் காட்டுவான் வரைந்த பத்திரிகைகளானும், சிலபண்டிதர்கள்முன் என்னால் வினவப்பெற்ற தடைகளுக்கு அவ ர்கள்வாக்கினின்றெழுந்த விடைகளானும் விருத்தியடைந்தது.

இங்ஙனந் தோன்றி விருத்தியடைந்த ஐயம், ஸ்ரீலஸ்ரீ சொக்க புரம் இராமலிங்கத்தம்பிரான்சுவாமியவர்களிடத்துப் பாடங்கேட்ட சைவசித்தாந்த நூலுணர்ச்சியால் ஸ்ரீ சிவஞானமுனிவர் செய்தரு ளிய சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞானசித்தியார் சுபக்கவுரை, சிவஞானபோதபாடியம் இவைகளினும், மற்று முரையுள்ளனவு மில்லனவுமாகிய சைவ சித்தாந்த நூல்களினும், தமிழில் எழுதப் பட்டிருக்கும் பிறமத நூல்களினும் பல்காற் பயின்றுவந்ததனு

னும, 'வேதாந்தத் தெளிவாகு சைவ சித்தாந்தத் திற னிங்குத் தெரிகக' வல்லுநராகிய சில பண்டிதர்கள் உபந்நியசித்துக்கொ ணடுவந்த சிவதததுவவிவேக சகித சிகரிணீமாலையையும் ஸ்ரீகண்டீய சகித வேதாந்த சூததிராாத்ததகதையும் சிரவணஞ்செய்து வந்தத ஞலும் நீங்கி, எனது சிற்றறிவிற்குத திருக்குறள் முதறபாவின் உரை யுண்மை ஒருவாறு விளங்கியதாகக் காணபபட்டது.

இங்ஙனம் விளங்கியதாகக் காணபபெற்ற யான் 'வாளாவிருந் தாலும் வாதிததுக் காதலென்சொற், கேளாது,' முறையினூலுணர் ந்தார் நம்மகததிருக்கும் குற்றங்களை நீக்கி 'குளவி புழுவைக் கொ ணர்ந்துதன்போ லாக்கும், வளமாக நம்புலிய வாாததை—யுளபொ ருளை, நாவலர்தஞ் சொற்போற' செய்வாரேயன்றி முனியார் எனக் கூறியதைககேட்டு, அங்ஙனம் விளங்கபபெறறதை எனது இயற்றமி ழாசிரியர் ஆசீர்வசனங்களைச் சிரமேறகொண்டு ஸ்ரீ சிவபெருமானது திருவருளை முன்னிட்டு ஸ்ரீ சிவஞானமுனிவரது உரைபாடங்களைக் கொண்டே "திருககுறள முதற்பாவின் பரிமேலழகருரை விளக்கம" எனுமபெயரால இச்சிறுநூல்வடிவமாக ஒருவாறு தொகுத்துப் பதிபபிததேன். ஆயினும் எனது சிற்றறிவிற்குப புலபபடாது பிழை பட்ட விஷயங்களையும் மறப்பினால விடுபட்ட விஷயங்களையும் திருக் குறளினும் பரிமேலழகருரையிலும் சைவ சிததாந்த நூல்களிலும் பல்காற் பயின்று பண்பட்ட பண்டிதர்கள யாரேனும் அன்போடு அடியேனுககு அறிவிப்பாராயின் "நாண பெரியோமலலோ நாம் நன் றுநீதும நமக்குரைபபா ருளரென்று நாடுவோமே" என்னும் ஆன் றோர்வசனததை அவலமபிதத அடியேன் அவர்மாட்டுப பெருநன்றி பாராட்டி அவ்விஷயங்களை அவர்பெயருடன் இதறகோர் அநுபந்த மாக அச்சிட்டுப் பிரசுரஞ்செய்யச சிததனுக இருக்கிறேன்.

இனி, " அந்தமோ ராறினிற் சைவசித்தாந்த மரிதரிது " என் னுந் திருவாக்கை வலியுறுத்துவனவும, லௌகிக வைதிக மார்க் கங்களாக விளங்குவனவுமாகிய வேதாகமங்களைத் தழீஇக் குரு சிஷ்ய சமவாதமாக எழுதபபெறற சைவசித்தாந்த் தீபிகையையும விரைவில பிரசுரஞ்செயயும்படி ஸ்ரீ சிவபெருமான் திருவருள் பாலிபபாராக.

இங்ஙனம்,
பா. கங்காதரன்

உ

சிவமயம்.

# திருக்குறள் முதற்பாவின்

## பரிமேலழகருரை விளக்கம்.

### விநாயகவணக்கம்.

தம்மா லறிந்தவெல்லாந் தாமல்ல வென்றுணர்ந்துஞ்
சும்மா விருக்குஞ் சுகமளிக்கு—மம்மவொரு
சூர்பபகநன் ஞாங்காவிடு சுப்ரமணி யற்குமுனுஞ்
சூர்ப்பகநன் பாதத்துணை.

---

### சிவவணக்கம்.

'அகர வுயிர்போ லறிவாகி யெங்கு'
நிகரற நிற்கு நிமல—னுகளநிறச
செம்பதுமச் சேவடியே சிந்திததேத நிததொழுது
வெம்பவததி னீங்கிடுவா மே.

### அவையடக்கம்.

தம்மை யறிந்தோர் தகைசாலு நூற்பொருள்கள்
தம்மை யறிந்தே தவறகற்றி—யெம்மை
பிரியாத வத்துவிதம் பேசுவா ரல்லார்
விரிவாகப் பேசுவரோ வீண்.

சிவமயம்.

# திருக்குறள் முதற்பா.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

## பரிமேலழகருரை.

எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடை யன; அதுபோல, உலகம் ஆதிபகவனாகிய முதலை யுடைத்து.

I. இது, தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை.

II. அகரத்திற்குத்தலைமை விகாரத்தானன்றி நாத மாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற் குத்தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கையுணர் வான் முற்றுமுணர்தலானுங் கொள்க.

III தமிழெழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல்நோக்கி 'எழுத்தெல்லாம்' என்றார்.

IV. 'ஆதிபகவன்' என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு.

V. 'உலகு' என்றது, ஈண்டு உயிர்கண்மேனின்றது.

VI. காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கட வுட்கு உண்மை கூறவேண்டுதலின், 'ஆதிபகவன் முதற் றேயுலகு' என உலகின்மேல்வைத்துக் கூறினார்; கூறினா ரேனும், உலகிற்குமுதல் ஆதிபகவன் என்பது கருத்தா கக்கொள்க.

VII. ஏகாரம், தேற்றத்தின்கண் வந்தது.

VIII. இப்பாட்டான், முதற்கடவுளது உண்மை கூறப் பட்டது

# பரிமேலழகருரைவிளக்கம்.

I. "இது தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை."

ஈண்டுத் தலைமை என்றது காரணமாதற்றன்மையை. எடுத்துக் காட்டுவமையாவது, பிம்பப் பிரதிபிம்பத் தன்மையால் இரண்டு வாக்கியங்களாய் வரும் உவமையாம். இது, நிரலெடுத்துக்காட்டுவமை, முரணெடுத்துக்காட்டுவமை என இருவகைப்படும். அவற்றுள், இப்பாட்டு-அகரத்திற்கும் ஆதிபகவற்கும் உள்ள பிம்பப் பிரதிபிம்பத்தன்மையை உணர்த்துதலால், நிரலெடுத்துக்காட்டுவமையென்க. ஈண்டுப் பிம்பப்பிரதிபிம்பத்தன்மையாவது: அகரம் ஏனைய எழுத்துக்களியங்குதற்குக் காரணமாகின்றதும், ஆதிபகவன் உலகமுணர்தற்குக் காரணமாகின்றதுமாகிய சாதிருசியதர்மமாம். அவ்வாறாதலின், அகரத்திற்கும் ஆதிபகவற்கும் உள்ள சுவாதந்திரியமும், ஏனைய எழுத்துக்கட்கும் உலகிற்கும் உள்ள பாரதந்திரியமும், சுதந்திர பரதந்திரப் பொருள்களுக்குள்ள வியாபக வியாப்பிய சம்பந்தமும் இனிது விளங்காநிற்கும்.

II. "அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாத மாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கையுணர் வான் முற்றுமுணர்தலானுங் கொள்க."

அகரத்திற்குத்தலைமை முயற்சிமுதலியவற்றான் விகாரமெய்தியவழியும் இயங்கப்பெறாத ஏனைய எழுத்துக்களோடு விரவிநின்று உபகரித்தன்மாத்திரத்தான் விகாரமெய்தாது நாதமாத்திரையான இயல்பாற் பிறத்தலானும் என்பார் "அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலான்" என்றும், ஆதிபகவற்குத்தலைமை பொறிமுதலியவற்றோடு கூடியவழியும் உணரமாட்டாத உலகத்தோடு விரவிநின்று உபகரித்தன்மாத்திரத்தான் செயற்கையுணர்வெய்தாது இயற்கையுணர்வான் முழுது முணர்தலானும் என்பார் "ஆதிபகவற்குத்தலைமை செயற்கையுணர் வானன்றி இயற்கையுணர்வான் முற்றுமுணர்தலான்" என்றுங் கூறினார். உம்மைகள்-எண்ணின்கண் வந்தன.

எழுத்துக்களெல்லாம் முயற்சிமுதலியவற்றான் விகாரமெய்திய வழியும் அகரமின்றி இயங்கப்பெறாமையை "மெய்யி னியக்க மகர மொடு சிவணும்" என்னுஞ் சூத்திரத்தானும், உலகம் பொறிமுதலி

யவற்றோடு கூடியவழியும் முதல்வனையின்றி யுணரமாட்டாமையை "மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றுங், கருவிக ளொன்று நீங்காக் கலாதிக ளொன்றுங் கூடி, பொருபுல னுகரு மிந்த வொழுங்கொழிந் துயிரு மொன்றைத், தெரிவுறு தவனே ழிந்தத் திரள்களுஞ்செயலி லாவே" என்னுந் திருவாக்கானும் அறிக. எழுத்துக்களோடு விரவிநிற்றலால் அகரத்திற்கு விகாரமின்மையை "மெய்யோடியையினு முயிரியற்றிரியா" என்னுஞ் சூத்திரத்தானும், உலகத்தோடு விரவி நிற்றலால் முதல்வற்கு விகாரமின்மையை "பரனுயிருணர்வொடுபாச பேதமும, விரவுறு தெங்கணு மேவு முண்மையே" என்னுந் திருவாக்கானும் அறிக.

விகாரத்தாற்பிறத்தலாவது,—விந்துவின் காரியமாகிய நாதம் பிராணவுதானங்களின் தொழிற்பாட்டால் உரங்கண்டமுச்சிமூக்கென்னும் இடங்களை யுற்று இதழ்நாபபல்அண்ணங்களிற் பட்டுச் சிதறுண்டு வெவ்வேறெழுத்தாகிய ஒலியாய்ப் பிறத்தலாம்.

இயல்பாற்பிறத்தலாவது, — விந்துவின்காரியமாகிய நாதம் பிராணவுதானங்களின் தொழிற்பாட்டால் அங்காந்தமாத்திரத்தில் தன்னியல்பின் மாறுபடாது பிறத்தலாம்.

நாதம் = சுத்தமாயாவிருத்தியாகிய பரசரீரத்தினின்றுந் தோன்றிய வியஞ்சகவொலி.

செயற்கையுணர்வாவது, — அநாதிபெத்தசித்துத்தன்மையால் வியஞ்சகமுள்வழி அதுவதுவாய் ஏகதேசமாத்திரையின் உணருமுணர்வாம்.

இயற்கையுணர்வாவது,—அநாதிமுத்தசித்துத்தன்மையால் எவற்றையும் ஒருங்கே ஓரியையபான் உணருமுணர்வாம்.

அகரம் கலப்பினு லெழுததெல்லாமாகவும், பொருண்மையால் வேறாகவும், ஏனையவெழுத்துக்கட்குயிராதற்றன்மையால் உடனாகவும் நிற்கும். இதனை "அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறா யமர்ந்ததென" என்னுந் திருவாக்கான் அறியலாம்.

முதல்வன் கலப்பினு லுலகெல்லாமாகவும், பொருண்மையால் வேறாகவும, உயிர்க்குயிராதற்றன்மையால் உடனாகவும் நிற்பன் இதனை, "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம," "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம"

என்னும் இததொடக்கததனவாகிய சுருதிகளானும், "அவையேதானேயாய்," "உலகெலாமாகி வேறாயுடனுமாய்," "உடலுயிரகண்ணருக்கனறிவொளிபோல்" என்னும இவைமுதலிய திருவாக்குக்களானும அறியலாம்.

ஆசிரியர் பாரத்துவாசிநச்சினார்க்கினியர் "மெய்யினியக்கமகரமொடு சிவணும" எனனுஞ் சூததிரவுரையில் 'இறைவன இயங்குதிணைக்கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவறறின்கணணும் அவற்றின் தன்மையாய் நிறகுமாறு எலலாாகரும் ஒபபமுடிந்தாறபோல, அகரமும் உயிரக்கண்ணுந் தனிமெய்க்கணணுங கலந்து அவற்றின் தன்மையாயே நிறகுமென்பது சான்றோாகெலலா மொப்பமுடிந்தது' எனக் கூறியதூஉம் இககருததேபறறியாம.

இனி 'வாமதேவமுனிவன்முதலியோர் யானே யுலகெல்லாமாயினேன் எனக்கூறுதலானும், சர்வஞானோத்தரததில் யானேயெலலாமாய் அல்லனுமாய் உடனுமாய்நின்றேனென்று உயிாகண்மேல் வைததோதுதலானும் உயிர்களும இவ்விலக்கணததனவாவான் செல்லுமபோலுமெனின்,' பாசக்கூட்டததினீங்கித தனியாய்நின்று ஸோஹமபாவனைசெயயும் உயிாகள் தமமகதது முதல்வன் புகுந்து வேறறுமையின்றித தோன்றலான் முத்திககாலத்து யானே யுலகெல்லாமாயினேன் எனக் கூறவந்ததாகலின், அதுபறறி யுயிாகளு மவ்வாறாவான் செல்லுமா றெங்ஙனமெனக.

'இவவொறறுமைபறறியன்றே அருச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுதத கண்ணன், யானே யுலகெல்லா மாயினேனென்றதூஉம், முதல்வனது விச்சுவரூபததைத தான காடடியதூஉம், ஏனையவற்றைக கைவிட்டு என்னையே வழிபடுகவென்றதூஉம், அதனையுறுதியாகக்கொண்ட அருசசுனன் அவன்கூறிய கருததுநோக்கிச் சாங்காறுஞ் சிவபூசைசெய்ததூஉம், கண்ணன்மேல் இட்ட போதுகள் முதலவன்திருமுடிமேற கண்டதூஉ மென்க.'

இங்ஙனம கூறியவாற்றான் முதல்வனும உலகும் பொன்னும் பணியுமபோல் அபேதமெனவும், ஒளியும இருளுமபோல் பேதமெனவும், சொல்லும் பொருளுமபோல் பேதாபேதமெனவும் பிணங்கிக்கூறுவாரை மறுத்து, உடலுயிர கண்ணருக்கனறிவொளிபோலும் அமமூனறியலபுந் தனக்கேடோன்ற நிறகும அததுவிதததன்மை

இனிது விளங்காநிற்கும் என்பதனை "..............பொற்பணிபோ லபேதப் பிறபபிலதா யிருளொளிபோற் பேதமுஞ் சொறபொருள் போற் பேதாபேதமு மின்றி ..........., உடலுயிர்கண்ணருக்க னறிவொளிபோற் பிரிவருமத் துவித மாகும்" என்னுந் திருவாக்கு வலியுறுத்தியவாற்று னறியலாம்.

"அத்துவிதமென்னுஞ் சொல்லில் நகரம் "தத்பாவந் தத்ந்நி யந் தத்விருத்த, மெனமூன் ருகு நஞ்ஞுதற புருடன்" என்னும் விதியால் இன்மை அன்மை மறுதலை எனனு மூன்றனு ளொன்று பயக்கும்; அவற்றுள:—

"இன்மைப்பொருள்கொண்ட மாயாவாதிகள் இரண்டின்மை யொருபொருண்மாத்திரையினன்றி இரண்டுமுதலியவாயெண்ணப் படும் பொருளகளினிலலாமையால, அத்துவிதமென்னுஞ் சொற குப் பொருள ஒன்றென்பதேயா மெனவும; ஒருபொருளாயினுங் குணகுணியென வேறறுமைதோன்றநிற்பிற் கேவல மொன்ருதலின் மையின அத்துவிதமென்ப துபசாரச்சொலலாய் முடியுமாகலான், தன்னின்வேரு யொருபொருளுமின்றித் தானுங் குணமுடைய பொ ருளென விசேடிககபபடுதலின்றி நிர்விசேடமாய்நிறகும் பரப்பிரமப பொருள என்பது அத்துவிதமென்னுஞ சொற்குப் பொருள என வுங் கோடலின், அவா கேவலாத்துவிதிகளென வழங்கபபடுவா."

"இராமாநுசர் சிவாத்துவிதசைவர் முதலியோரும் அவ்வாறே இன்மைபபொருள்பற்றி யொன்றேயெனப பொருள்கொண்டு, சத் தியசங்கற்ப முதலிய குணங்கள் பரப்பிரமபபொருட்குளவென்று உபநிடதஙகளிற் கூறுதலானும், அவை செயறகைக்குணம் என்ற ற்கு ஓரியைபின்மையானும், பசுபாசங்களது உண்மையு முபநிடதங் களுள ஓதபபடுதலானும், அவறறேறு முரணிக கேவலாததுவிதமெ னக் கோடல் பொருந்தாமையின், தன்னுடையைபுடைய பசுபா சங்களானும் தன்குணங்களாய சத்தியசங்கற்பமுதலியவற்ருனும் விசேடிககபபட்டு விசிட்டமாய் நின்ற பரப்பிரமம் இரண்டில்லை; ஒன்றென்பதே அத்துவிதமென்னுஞ்சொறகுப பொருளென விசிட் டாத்துவிதங் கோடலின், அவர் விசிட்டாத்துவிதிகளென வழங்கப் படுவர்."

"பேதவாதிகள் மறுதலைப் பொருள்பற்றி இரண்டன்மறுத யாகிய ஒன்றெனப பொருள்கொண்டு, அங்ஙனங்கொள்ளவே அவ்

வொன்றன் மறுதலையாகிய இரண்டாவது மூண்டென்றற்கிழுக்கின் மையின், அத்துவிதமென்பதுந் துவிதமென்னும் பொருளைப் பயக்கு மென்று போவர்.”

“அவரெல்லாரும் அத்துவிதமென்ற சொற்குப் பொருள் ஒன்றென்பதேயாம் எனக்கொண்டு தத்தாமதங்களோடு முரணு மைப்பொருட்டுக் கேவலம விசிட்டம் மறுதலை என்னும் அடை கூட்டி இடர்ப்பட்டுப பொருள்கொள்வர். அவருண் மாயாவாதி கூறுங் கேவலமும், பேதவாதிகூறும் மறுதலையுஞ் சுருதியோடு முரணுதலின், ஈண்டைக் கேலாவாம். ஏனையோர்கூறும விசிட்டம் என்பது பொருந்துமாயினும், அத்துவிதமென்னுஞசொற்குப் பொருள் ஒன்றெனக் கோடல பொருந்தாது. என்னை? ஒன்றென்பது பொருளாயின் ஒன்றெனவே விளங்கக்கூறலமையும; அவ்வாறன்றி அத்துவிதமென வுய்ததுணரவைத்தோதவேண்டாமையானும், ஒன் றெனப பொருள்கொள்ளின் மாவாககியபபொருள பயபபதோர் விசேடமின்மையின் அததுவிதமென்றதுபறறி ஆண்டொரு பயன் படாமையானும; என்க.”

“மறறென்னையோ அத்துவிதமென்னுஞ சொறகுப பொருளெ னின, சித்தாந்தசைவ ருரைக்குமாறுகாட்டுதும: அது நீயாகின்றாய் எனவும், அது நானாகினறேன் எனவும, அதுவ துவாகினறது எனவு மூவிடமபறறி நிகழுந் “தத்துவமசி” முதலிய மாவாககியங்களைக் கேட்டவழி, ‘அதுவென்பதொருபொருள் நீயென்பதொருபொரு ளாகலின், ஒருபொருள் மறறொருபொருளாமாறு யாங்ஙனம்’என்னு மைய நீககுதறகெழுநததாகலின், அதுவதுவாதறகேதுவாய் அவ் விரண்டறகு முளதாகிய சமபந்தவிசேடமுணாத ததலே அத்துவித மென்னுஞ சொற்குப பொருளென் றுணாந்துகொளக”

“அறறேல், அத்துவிதமென்னுஞ் சொல்லாற பெறப்படுஞ் சமபந்தம ஐக்கியமோ, தாதான்மியமோ, சமவாயமோ, சையோ கமோ, சொரூபமோ, வேறோ வெனக் கடாயினாககு, யாற்றுநீருங் கடனீருந் தம்மிற்சேர்ந்தாறபோலவும்,குடாகாயமு மகாகாயமுந் தம் மிறசேர்ந்தாறபோலவும ஐக்கியமெனின்; அங்ஙனஞ் சேர்ந்தவழி யொருபொருளேயாதலின், ஒன்றெனவேயமையும; அத்துவித மென வுய்த்துணரவைத்தோதவேண்டா; அன்றியும்,ஒன்றாயவழி அதுவது வாய்நின்றறிதலாகிய· ஆன்மவிலக்கணம் முத்திக்காலத்திலலை யென

ப்பட்டு வழுவாமாகலின், அது பொருந்தாமையானும்; குணகுணி கட்குத் தம்மினுளதாகிய சம்பந்தம்போலுந் தாதான்மியமெனின், ஆன்மா முதல்வனைப்போலக் குணகுணிபொருளாய் நிற்பதன்றி முதல்வனுக்குக் குணமாகாமையான், அவ்வாறியைதல் கூடாமையா னும்; தாதான்மியத்தின் வேறாய் நையாயிகர் கூறுஞ் சமவாயமென்ப தொன்றின்மையானும; விரலும்விரலுஞ் சேர்ந்துநின்றாற் போலச் சையோக மெனின், அவ்வியாப்பியவிருத்தியாகிய சையோகம் வியா பகப்பொருள்கட்குக் கூடாமையானும்; யாதானுமோரியைபுபற்றிக் கூறப்படுஞ் சொரூபமெனின், அது மாவாக்கியப்பொருளை வலி யுறுத்துதற் கெழுந்த அதத்துவிதமென்னுஞ்சொற்குப் பொருளாகா மையானும்; சொரூபசம்பந்தமாத்திரையிற் சிவானந்ததை யனுப விதத்தல்கூடாமையானும்; இவற்றின்வேறு யின்னதென்றறியவாராத அநிர்வசநமெனின், அங்ஙனங் கூறுதல் மாயாவாதி கூற்றாய் வழு வாமாகலானும்; அவையெல்லா மீண்டைக்கேலாமையின் வேறுவிடு க்குமா றென்னையெனிற கூறுதும்: ஒருபொருளே அவயவாவயவிக ளாயாதல் குணகுணிகளாயாதல் வேற்றுமைப்பட்டிரண்டாய்நிற்றற் கேதுவாகிய தாதான்மியமும, அதுபோல இருபொருளே யதுவது வாயொற்றுமைபபட் டொன்றாய்நிற்றற்கேதுவாகிய தாதான்மியமு மெனத் தாதான்மியசம்பந்த மிருவகைப்படும்; அவற்றுள முன்னை யது தாதான்மியமென்றும, பின்னையது அதத்துவிதமென்றும் வழங் கப்படும்; அத்துவித மென்னுஞ் சொல்லியல்பு மேற்கூறியவாற் றான் வேறுபொருள் தருமாறின்றி (அபபிராமணனென்றாற்போல) அன்மைபபொருள்பற்றி இரண்டனறென வேற்றுமைப்படாமை யைவிளக்கிநிற்றலாமென்க.''

இதுவே சந்தாநகுரவர்களாகிய மெய்கண்ட சிவாசாரியர் உமா பதிசிவாசாரியர் இவர்களகருததாமென்பதனை முறையே ''அத்து விதமென்ற சொலலே அந்நியநாததியை யுணாதது மாயிட்டு'' என வோதியதனும், ''பிரிவருமதத்துவிதமாகுஞ் சிறப்பினதாய்'' என வுடமபொடுபுணர்த்தோதியதனுனும் அறியலாம்.

''இவ்வதத்துவிதம், அபேதசம்பந்தமாகிய ஐக்கியமுமன்றி, பேதாபேத சம்பந்தமாகிய தாதான்மியமுமன்றி, பேதசம்பந்தமாகிய சையோகமுமன்றி, கலப்பும் உடனாதலும வேறாதலுமாகிய மூன்றுந் தன்கட்டோன்ற நிற்றல்பற்றி, அம்மூன்றற்கும் பொதுவா

கக்கூறப்படுமாதலான்; இவ்வத்துவிதத்திற் கொவ்வோரிடங்களின் 'அலைகடலிற்சென்றடங்கு மாறுபோல்' எனவும் 'வானகத்தில்வாறு மணத்தில் மணமும்போல' எனவும் அபேதவுவமையும், 'பண்ணைய மோசையும்போலப பழமதுவு, மெண்ணுஞ் சுவையும்போல்' என வும் 'நீருமிரதமும்போ, லாங்கா ணரனாருள்' எனவும் பேதாபேத வுவமையும், 'இரும்பைக்காந்தம்வலித்தாற்போ லியைந்து' எனப் பேதவுவமையும் ஒருபுடையொபபுமைபற்றி எடுத்துக்காட்டுபவாக லின், இங்ஙனம தமமுண்முரணுவனபோல வேறுவேறு எடுத்துக் காட்டுதல்பற்றி மலையற்க. இம்மூன்றியைபுந் தன்கட்டோன்ற இவற்றிற்குவேருய்கிறகும அதது விததகிறகுச் சிறந்தெடுத்துக்காட் டப்படு முவமையாவது ஆன்மபோதமுங் கண்ணொளியுந் தம்முள் அதது விதமாய் நிற்றலா மென்க." "காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற், காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின்" என மெய் கண்ட சிவாசாரியரும், "காட்டக்கண்டிடுந் தன்மையுடையகண் ணுக், கேயுமுயிர் காட்டிக்கண்டிடுமாபோல விசனுயிர்க்குக் காட் டிக்கண்டிடுவன்" என அருணந்திசிவாசாரியரும, "அறிவொளி போற் பிரிவருமத்துவிதமாகும்" என உமாபதிசிவாசாரியரும சித தாந்தமுடிபுணர்த்தும்வழி இதனையே எடுத்துககாட்டியவாற்று ணும் அறியலாம்.

"இவ்வத்துவிதம் ஏனையோர்கூறும் அதுவிதம்போலக் கேவ லம் என்றுதல், விசிட்டம் என்றுதல், மறுதலையென்றுதல் யாதா னும் ஒன்றன் விசேடிக்கபபட்டுநின்று பொருளுணாத்தாது சுத்த மாய்நின்றே பொருளுணர்த்துதலின் சுததாததுவிதமென வழங்கப் படும்."

"ஈண்டுச் சுததமென்றது யாதொன்றனும் விசேடிக்கப்படாது நிற்றலை; அது விசிஷ்டசத்தை சுத்தசத்தை யெனத் தார்க்கிகர் கூறும் வாய்பாட்டா னறிக."

"இங்ஙனம் ஒருபொருளிருதன்மையான் வியாபகமும் வியாப் பியமுமாய் வேற்றுமைப்பட்டுநிற்குந் தாதான்மியம்போல, வியாபக மும் வியாப்பியமுமான இருபொருளொருதன்மையானொற்றுமைப் பட்டுநிற்குந் தாதான்மிய சம்பந்தமொன்றுண்டெனவும், அதுவே அன்மைபபொருள்பறறி அததுவிதமென்னுஞ் சொல்லானுணர்த் தப்பட்டதெனவும் அறியமாட்டாதார் அததுவிதம் என்னுஞ்சொற் குத் ததமக்குவேண்டியவாறு பொருளுரைப்பர்."

## III "தமிழெழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கு முதலாதல்நோக்கி 'எழுத்தெல்லாம்' என்றார்."

வடவெழுத்துந் தமிழெழுத்தினுஞ்சிறந்தமை தோன்ற உம்மை கொடுத்தார். தென்மொழி வடமொழிகளை மகேச்சுரரால் முறையே அகத்தியனாரும் பாணினியாரும் ஓதியுணர்ந்தமையானும், அவ்விருமொழிகளும் எல்லாப் பாஷைகளுக்குங் காரணமாக சிறத்தலானும் 'தமிழெழுத்து' 'வடவெழுத்து' என்றார். இக்காரணத்தால் தமிழெழுத்தும் வடவெழுத்தும் அநாதியாய் ஆரிஷமாயினவென்பது தானே விளங்கும்.

## IV "ஆதிபகவன் என்னு மிருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு."

வடநூன்முடிபாகலின் இயல்பாயிற்று, தமிழ்நூன்முடிபாயின் "அவற்றுள், இகரவிறுபெயர் திரிபிடனுடைத்தே" என்னும் விதியால் நம்பிகொற்றன், நம்பிச்சாத்தன், நம்பிப்பிள்ளை என்பன போல ஆதிப்பகவன் என வல்லொற்றுமிக்குவரும்.

## V. "உலகு என்றது ஈண்டுயிர்கண்மேனின்றது."

உலகு என்னுஞ்சொல் சேதநம் அசேதநம் என்னும் இருகூற்றுப் பிரபஞ்சத்தையுங் குறிக்கத்தக்கது. ஆயினும் சேதநபிரபஞ்சமொன்றே ஆதிபகவன் தமக்கருளவழங்குஞ் சச்சிதானந்த முழுமுதலவனென்றறிந்து அவனுணைவழியொழுகிப் போகமும் வீடுபேறும் பொருந்துமுரிமையுடையதென்பார் 'உலகென்றது ஈண்டுயிர்கண்மேனின்றது' என்றார். என்றாரேனும், சேதநபிரபஞ்சத்தையொட்டியே ஆதிபகவனுணையாற்றான் தோற்ற நிலை யிறுதிகளைப் பெறுதலால் அசேதந பிரபஞ்சமுங் கொள்ளத்தக்கதேயாம். அங்ஙனங்கொள்ளின் உயிரும் மெய்யும் ஆகிய எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையனவாதல்போல, சேதநமும் அசேதநமும் ஆகிய இருகூற்றுப் பிரபஞ்சமும் ஆதிபகவனாகிய முதலையுடைத்தாதல் நன்குவிளங்கும். இவ்வுண்மையை "ஜ்ஞாநவாநாஞ்ச ஜகதாம் ஶிவோ தேவ ப்ராணஉவ்ருதே । வ்யாகஷம் விநா நாஸ்தி வாக்ஷராணாமகாரவத்" "ஶிவஸ்ய ஸர்வஸ்ய ஜகதாமக்ஷராணாமகாரவத்" என்னும் வடநூன் மேற்கோள்களான் அறியலாம்.

VI. "காணப்பட்டவுலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மைகூறவேண்டுதலின் 'ஆதிபகவன் முதற்றேயுலகு' என வுலகின்மேல் வைத்துக்கூறினார்; கூறினாரேனும் உலகிற்குமுதல் ஆதிபகவனென்பது கருத்தாகக்கொள்க."

காணப்பட்டவுலகம்=சுட்டுணர்வாலறியப்பட்டவுலகம். [சுட்டுணர்வு=பசுபாசங்களின்ஞானம்.] காணப்படாத கடவுள்=சுட்டுணர்வாலறியப்படாத கடவுள். உண்மை=உளதாந்தன்மை. முதல்=முதற்காரணம்.

சுட்டியறியப்படும்பொருள் அசித்தும் அசத்துமாமெனச் சுருதிகள் முறையிடுதலால், அதுவே தோற்றநிலையிறுதியென்னும் முத்தொழிற்பட்டவழிச் சுட்டுணர்விற்கு விடயமாந்தன்மைத்தாமென்பார் 'காணப்பட்டவுலகம்' என்றார்.

சச்சிதானந்தரூபனாகிய இறைவன் சடமாயாப்பிரபஞ்சம்போறலின்மையால் சுட்டியறியப்படும் பொருளுமன்று, அநிர்வசநீயமெனப்படும் சூனியமன்மையால், ஒருவாற்றானும் அறியப்படாதபொருளுமன்று என்பார் 'காணப்படாத கடவுள்' என்றார்.

காரியமாகிய உலகிற்குக் காரணமாகிய கடவுள் உண்டெனனும் ஆகமப் பிரமாணத்தை வலியுறுத்துவதாய அநுமானப் பிரமாணத்தாலறிகவென்பார் 'காணப்பட்ட வுலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின்' என்றார்.

உயிர்க்குயிராய்நின்று உணர்ந்து முகத்தான் தனுகரணாதிகளைக் கொடுப்போனும் முதல்வனேயாவனென்பதை அறிவுறுத்தற்பொருட்டும், உலகிற்குமுதல் அணுவெனவும் காலமெனவும் கேவலமாயையெனவுங் கூறுவாரது மதங்களை மறுத்தற்பொருட்டும் 'உலகிற்குமுதல் ஆதிபகவனென்பது கருத்தாகக்கொள்க' என்றார்.

ஆரியன்குலாலனாய்நின்றாக்குவனிலமெல்லாம்' எனச் சுருதி கூறுகின்றமையானும்; குடத்திற்கு நிமித்தனாகிய குலாலன் முதற்காரணமாகிய மண்ணின்தன்மையைப் பெறாததுபோல, உலகிற்கு நிமித்தனாகிய முதல்வன் முதற்காரணமாகிய மாயையின் தன்மையைப் பெறாமையானும்; குலால குவிந்தர்கள் தாமே மண்ணாகவும் நூலாகவுமிருந்து கடபடாதிகளாகத் தோன்றாமைபோல, முதல்வன் தானே மாயையாக நின்று உலகாகத் தோன்றாமையானும்;

கடபடாதிகள் தாமே குலாலகுவிந்தர்களினின்றுந் தோன்றாமை போல, உலகம் தானே முதல்வனிடத்தினின்றுந் தோன்றாமையானும்; குடத்திற்கு நிமித்தம்வேறும் முதல்வேறும் வேண்டப்படுதல் போல, உலகிற்கு நிமித்தம்வேறும் முதல்வேறும் வேண்டப்படுமாகலான் உலகிற்கு ஆதிபகவன் நிமித்தமும் மாயை முதலுமாமேயன்றி ஆதிபகவன் முதலாகான் எனின், அற்றன்று: "யதேகேந ம்ருத்பிண்டேந ஜ்ஞாதேந ஸர்வம் ம்ருந்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்" என்னுஞ் சுருதி மண்ணொன்றையறிந்தமாத்திரத்தில (அதன் காரியமாகிய) கடாதிகளு மண்மயமாகவே அறியப்பட்டனவாகின்றன; அதுபோல முதல்வனை யறிந்தமாத்திரத்தில் இந்தப் பிரபஞ்சமெல்லாம அவனாகவே அறியப்பட்டதாகின்றது என உபதேசிப்பதனால், நிமித்தர்களாகிய குலாலகுவிந்தர்களை யறிந்துங் கடபடாதிகளை அவர்களாகக் காண்டற்காகாமையும், முதலாகிய மண்ணூல்களை யறிந்தால் கடபடாதிகளை அவைகளாகக்காண்டற் காதலையும்போலாது, நிமித்தனாகிய முதல்வனையறிந்த மாத்திரத்தில் உலகெலாமவனாகவே காணப்பட்டதாகின்றமையால் உலகிற்குமுதல் ஆதிபகவனென்பது இனிதுவிளங்காநிற்கும். அன்றியும, "ததைக்ஷத । பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி" என்னுஞ்சுருதி அதனெல்லாமாவோமெனச் சங்கற்பித்ததெனவும், "விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி:" என்னுஞ்சுருதி மஹர்ஷியாகிய உருத்திரன் உலகினையிறந்துநின்றவன் எனவும், "ஸர்வோ வை ருத்ர:" என்னுஞ்சுருதி உலகெலாமாய் நின்றவன் உருத்திரன் எனவும் உபதேசிக்கின்றமையானும், உலகிற்குமுதல ஆதிபகவனெனபது தெற்றென விளங்காநிற்கும். இஃதன்றியும், "மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநம் து மஹேஶ்வரம் । தஸ்யாவயவ பூதைஸ்து வ்யாப்தம் ஸர்வமிதம் ஜகத்" என்னுஞ் சுருதி மாயையே முதற்காரணமென்றறிக, மாயையையுடையோன் மகேச்சுரன், அவனது அவயவமாகிய அதனால் இந்த வுலகமெல்லாம் வியாபிக்கப்பெற்றது என வுபதேசித்தமையானும; "உலகவனுருவிற் றோன்றி யொடுங்கிடும்" என்னுந்திருவாக்கானும; கேவலங் கிழங்கினின்றாவது சேற்றினின்றாவது தாமரை யுண்டாகாததுபோல, கேவலம் மாயையினின்றாவது மகேச்சுரனினின்றாவது உலகமுண்டாவதில்லையாகலான்; சேற்றின்கண் கிழங்குள்ளதாக அதினின்றுந் தாமரை தோன்றுமாறுபோல, இறைவனது சத்தியின்கண் மாயையுள்ளதாக அதினின்றும் உலகந்தோன்றுதலின், ஆதிபகவனேகே முதற்காரணத்துவ

மும் உரித்தாதலறியலாம். இங்ஙனங் கூறியவாற்றால் நிமித்த காரணனாகிய முதல்வன் உலகிற்கு முதற்காரணனல்லனாயினும், முதற் காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய் நிற்றலின் 'உலகிற்கு முதல ஆதிபகவன்' ஆதல் நன்குவிளங்கும்.

[சேற்றின்கண் கிழங்குள்ளதாக அதினின்றுந் தாமரைதோன்றியதை 'பங்கஜம்' என்னுஞ் சொல்லியல்பானும், இறைவனது சத்தியின்கண் மாயையுள்ளதாக அதினின்றும் உலகந்தோன்றியதை 'விஶ்வகாரணன்' என்னுஞ் சுருதிவாக்கியத்தானு மறியலாம்.]

அற்றேல், சச்சிதாநந்த மங்களரூபனாகிய முதல்வன் அந்ருத சடதுக்க ரூபமாகிய உலகிற்குக் காரணமாயின் விகாரப்பட்டுநின்று அதனிற் பந்தமுறுவான்போலுமெனின், அம்முதல்வன் இறப்பு நிகழ்வு எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத்தொழிலும் செய்தும் தனக்குவிகாரமின்றிநிற்குங் காலம்போல விகாரப்படாது நின்று, பிரபஞ்சத்தைக் கரணங்களாற் படையாது சங்கற்பமாத்திரத்தானே படைத்து, அவ்வாறே காவாதுகாத்து அழியாதழித்தலான், கற்றநூற் சொல்லும் பொருளும் உள்ளத்திற்றோன்றுங்கால் உள்ளம் அவற்றிற்றொடக்குண்ணாதவாறுபோலவும், கனவின்கட் கண்டவற்றைப் புறத்து விடயங்களையறிந்துவந்த நனவுணர்வின் கண்ணே விளங்க அறிந்தவன் அப்பொழுது அவற்றிற்றொடக்குண்ணாதவாறுபோலவும், பந்தமுமின்றி அமலனாகவே விளங்கிநிற்பன் எனவறிக.

ஈண்டுப் பகவனெனப்படுவோன் "𑌯𑍋 𑌵𑍈 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌸 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌯𑌶𑍍𑌚 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃" என்னுஞ் சுருதிப்படி உருத்திரனேயாவன். எங்ஙனமெனின், "𑌅𑌥 𑌕𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌭𑌾𑌵𑌾𑌨𑍍 𑌨𑍀𑌕𑍍𑌷𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑌯𑌤𑌿 𑌯𑍋𑌗𑌂 𑌗𑌮𑌯𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍" என்னுஞ் சுருதிப்படி எல்லாவற்றையுமறிகின்றவனும், உயிர்கள் தன்னையறியவும் தனது ஞானத்தையும் யோகத்தையும் அடையவும் செய்கின்றவனும் அவனேயாகலானும், "𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌮𑌗𑍍𑌰𑌸𑍍𑌯 𑌵𑍀𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌯𑌶𑌸𑌃 𑌶𑍍𑌰𑌿𑌯𑌃 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌯𑍋𑌶𑍍𑌚𑍈𑌵 𑌷𑌣𑍍𑌣𑌾𑌂 𑌭𑌗 𑌇𑌤𑍀𑌰𑌣𑌾" என்னும் புராணவசனப்படி ஐசுவரியம் வீரியம் புகழ் திரு ஞானம் வைராக்கியம் என்னும் ஆறு குணங்களையுடையவனும் அவனேயாகலானு மெனக.

[ஈண்டு உருத்திரனென்றது மாசங்காரக்கடவுளாகிய பரம சிவனை; அவனுக்கும உருத்திரனென்னும பெயருண்மையின். உருத்திரன் என்னுஞ் சொற்கு வேதங்களாலும் வேதாந்தமுணர்ந்த பெரியோர்களாலுஞ் சொல்லப்படும் பொருளாவது: சம்சார துக்கத்தினின்றுந் தாண்டச்செய்கின்றவன் என்பதாம். இதனை "ருத்ரோந ச ஸம்ஸாரது:கம் த்ராவயதி ஹர: । ருத்ர இத்யுச்யதே வேதைஷாவி வேதாந்தவேதிபி:" என்னுஞ் சுலோகத்தா னறிக. ஐசுவரியமுண்மைக்கு ஈஸ்வரபதச்சுருதியும், வீரியமுண்மைக்கு உககிரபதசசுருதியும், புகழுண்மைக்குச் சிவபதச்சுருதியும், திருவுண்மைக்குச் சமபுபதச்சுருதியும், ஞானமுண்மைக்குச் சர்வஜ்ஞபதச்சுருதியும், வைராக்கியமுண்மைககுக் காமரிபுபதச்சுருதியும் பிரமாணங்களாம்.]

அதர்வணவேதம் சிவநாமங்களுள பகவந் என்னும் நாமந் தலைப்பெய் தெடுத்தோதியதனுனும, ருவேதாஸ்வதரம சிவபிரானைப் பகேசனென்றெடுத்தோதியதனுனும், பகவந்நாமப பொருளாயுள ளோன் ஸ்ரீ பரமசிவபிரபுவென்றே யறியலாம். இன்னும் இத னுண்மையை பௌஷ்கராகம விருத்தியினும, சதுர்வேத தாதபரிய சங்கிரகத்தினும், சிகரிணீமாலையினும விளங்கவறியலாம.

இனி மெய்யுணர்வெய்திய தேவா முனிவா முதலியோரைப பகவனெனனும பெயரால வழங்குவது அவாமாட்டு விளங்கும் பரமசிவவிபூதியினியைபுபற்றியாகலின அஃதுபசாரமேயாமெனப.

VII. "ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது."

தேற்றம்=தெளிவு.

VIII. "இப்பாட்டான் முதற்கடவுளதுண்மை கூற ப்பட்டது."

படைப்பு முதலிய தொழில்களைபபுரியும் நான்முகன் முதலி யோரையும உணணின்று பிரேரிக்கும் முதல்வன ஒருவனுளனுதலைக் குறிபபிபபான் 'முதற்கடவுளதுண்மை கூறபபட்டது'என்றுா.

ஈண்டு முதற்கடவுளாவார் -"யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே। யேந ஜாதாநி ஜீவந்தி। யத்ப்ரயந்த்யபிஸம்விஶந்தி । தத்விஜிஜ்ஞாஸஸ்வ। தத் ப்ரஹ்மேதி"என்னுஞ்சுருதி இந்தப்பூதங்கள் தோன்றி நின்றொடுங்கப்பெற்றதெதுவோ அதுவேபிரமமாமென வுபதேசிக்கின்றமையாலும்; "ஶிவாஸாயநஸ்ஸர்வதோஸ்ய ப்ரஹ்மாத்யா: ஸர்வ:

ப்ரஹ்மா: | ஸர்வஜ்ஞ: [illegible] ஸம்ஹர்த்தா: ஸ்ருஜதி [illegible]|"
என்னும் மேற்கோள் அந்தப்பிரமன்முதலியபசுக்கள் பிரபுவுக்கு லீலா சாதனங்களாக இருக்கின்றமையால் இந்த ஸர்வஜ்ஞரான ஶம்புவானவர் தோற்றநிலையிறுதிகளைச் செய்கிறார் எனவும், "ஸர்வாணி ஹ வா இமானி பூதானி [illegible]| ஸர்வாணீந்த்ரியாணி ஸஹ [illegible] ந காரணம்| காரணானாம் தாதா த்யாதா| காரணம் து த்யேய: ஸர்வைஶ்வர்ய ஸம்பந்ந: ஸர்வேஶ்வர: ஶம்பு: ஆகாஶமத்யே" என்னுஞ்சுருதி பூதங்களும் இந்திரியங்களும் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்திரர்களும் உண்டாக்கப்படுகிறார்கள்; (அவர்கள் முறையே) காரணங்களைத் தரித்தலானும் தியாதாவாதலானுங் காரணர்களாகார (ஆகலின்) சர்வைஶ்வரியங்களை யுடையவரும், சர்வேஶ்வரரும், ஶம்புவும், தகராகாசமத்தியில் தயேயராக நிற்பவரும் (எவரோ அவரே) காரணர் எனவும் உபதேசிக்கின்றமையானும் பரசிவம் பிரமமென்னப்பட்டு, ஒரு திரிவுமின்றி அநாதி முத்தசித்துருவாக நின்ற ஸ்ரீசிவபெருமானேயாவர்.

வேதத்துள் "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்" "ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே" "[illegible]" "அக்நிர்முகம் ப்ரதமோ தேவதாநாம்" "ஸூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்துஷஶ்ச" என்பவை முதலிய காரணவாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அக்கினி சூரியன் முதலியோரைக் காரணரென்றது குயவனைப்போல அவாந்தர காரணமாதல் பற்றியே. ஆகலின் அவையெல்லாம் ஆகுபெயரால் முதற்கடவுளையே யுணர்த்தி நிற்கும். ஆகலான் செய்தும் செய்வித்தும் எல்லாத்தொழிற்கும் வினைமுதலாய் நிற்பவனே முதற்கடவுளாம்.

"அகரமுதலவெழுத்தெல்லாம்" என்னுமுபமானம் பலகலையாகம வேதங்களைப் பிரளயந்தோறும் முறைபிறழாது கூறுகின்றவனும், பலகலையாகம வேதார்த்தமாயுள்ளவனும், பலகலையாகம வேத பிரமாணங்களாலறியப்படுபவனும் எவனோ அவனே உலகிற்கு முதற்கடவுளாமென வுய்த்துணர வோதியதூஉம், "ஆதிபகவன் முதற்றேயுலகு" என்னுமுபமேயம் முதல்வன் இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாகிய உலகம் விளங்கித்தோன்றுவான் அதனோடு விரவிநிற்பன் என இறைவனது கடத்தவிலக்கணங் கூறியதூஉமாம்.

முதல்வன் பிரபஞ்சோற்பத்திநிமித்தம் 'உலகெலாமாகி வேறாயுடனுமாய்' நிற்றல் தடத்தவிலக்கணமெனவும், தன்னுண்மையில் சிவசத்தாகிய சச்சிதாநந்தமாய் நிற்றல் சொரூபவிலக்கணமெனவுஞ் சுருதிகூறுமாற்றா னறியலாம்.

இனி, "அகரமுதலவெழுத்தெல்லாமாதி, பகவன்முதற்றேயுலகு" என்னுந் திருக்குறளின் முதற்பாவிற்குத் திரண்டபொருள்: "ஆன்மாவுக்கு அறிவுசெயல்கள் விளங்குதலும் விளங்கியபின் விடயத்திற்சென்று பற்றுதலும் இறைவன் திருவடியையின்றி யமையமாட்டா; அதுபற்றி இறைவனும், அக்கரங்களை இயக்குதற்பொருட்டு அவற்றுடன் கலந்துநிற்கும் அகரம்போல, அறிவுசெயல்கள் விளங்குதற்பொருட்டு உயிர்களோடுங் கலந்து நிற்பன். அங்ஙனம் விளங்கிய அறிவுசெயல்கள் பின்விடயத்திற்சென்று பற்றுதற்பொருட்டு அவ்வுயிர்களை அதிஷ்டித்துக்கொண்டு அவைசெல்லுமாறெல்லாம் அறிந்து செலுத்திஅவ்விடயங்களினுமுடனாகக் கலந்துநிற்பன். ஆகலான் ஆணவமலத்தினீங்கி வேறுநின்ற வுயிர்கள் அதுபோல இறைவனைவிட்டுத் தனித்து நிற்றல் ஓரிடத்துமில்லை" என்றறிந்து அடங்குவா மெய்யுணர்வினிலைபெறுவாரென்பதாம்.

இஃது இப்பொருட்டாதல் அடியில்வரும் அருணந்திசிவாசாரியருடைய அருமைத்திருவாக்கானும் அறியலாம்:—

"எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை
யறிந்தியற்றி யிடாவுயிர்க ளிறைவனுறு மறிவு
செவ்வியினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப
னிவ்வுயிர்க டோற்றமபோதவனை யின்றித்தோற்றா
வீறதனுக்கம முதலெழுத்தாக வெல்லாமாய் நிற்கு
மவ்வுயிர்போ னின்றிவ னுதலாலு
மரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே."

வள்ளுவர் நூலின் வருமுதற் பாவிற்குத்
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—விள்ளச்
சிவஞான பாடியத்தாற் சிற்றுரையாற் றந்தான்
அவஞானந் தீரவிளக் கம்.

"வணங்கி வாழ்த்தி மதிபபரும் பொருளை
வணங்கி வாழ்த்தி மதித்துமன் பெரிதே."

திருக்குறள் முதற்பாவின் பரிமேலழகருரை விளக்கம்
முற்றுப்பெற்றது.

# சூளாமணிக் குறிப்புரை.

**சூளாமணி**யென்பது தேவமணி யிரண்டனு ளொன்று; மற்றையது சிந்தாமணியென்ப. சூளா-தலை; மணி-இரத்தினம். எனவே தலையின்கண் அணியப்படும் இரத்தினம் அல்லது தலையினது (சம்பந்தமான) இரத்தின மென்பது பொருள்; முதற்பொருளில் ஏழாம்வேற்றுமை யுருபும்பயனு முடன் றொக்க தொகையும், இரண்டாம் பொருளில் ஆறும் வேற்றுமைத் தொகையுமாம். இது 'சூடாமணி' யெனவும் வழங்கும். "டளயோர பேத:" என்ற வடநூல் விதிபற்றி டகரமும் ளகரமும் ஒத்து நடத்தலிற் போலியாம். 'சூளாமணி' என்ற வொருவகைத் தலையணியின் பெயர் 'சிந்தாமணி' யென்பது போல உவமவாகுபெயராகக் காரணக் குறியாய் நூலுக் காயிற்று. எனவே பலராலும் அத்தகைய சிறப்புடைத்தென மேற்கொள் ளப் பெற்றுப் பாராட்டத் தகுவதொரு நூலா மென்பது பெற்றும். 'சூளா மணிப்படலம்' எனக் கம்பரும், 'சூடாமணி நிகண்டு', 'சந்திர சூளாமணி' யெனப்பிறருங் கூறுதல் காணக. சூடா - தலை மயிர் முடியுமாம். சிகாமணி, சிரோமணி, சிரோரத்ந மெனபனவுங் காண்க. சிந்தாமணி, கௌத்துவ மணி, சியமந்தகமணி யென்பனபோலச் சூளாமணியு மொருவகைத் தேவ மணி யென்பர் **பிங்கலந்தை யுடையா**ரும். வசன சூளாமணி: வசனமாகிய சூளாமணி யென விரிதலிற் பண்புத்தொகையாம்.

இந்நூலினைச் செய்யுணடையிற் செய்தவர் **தோலா மொழித்தேவர்** என்னும் பெயரிய வொரு சைன முனிவர். இவர் கார்வெட்டி நகரத்தரச ரொருவனாகிய விசயன் என்போனது காலத் திருந்தவ ரென்பதும் இவர் சைன ரென்பதும் பின்வரும் பாடலானுணரப்படும்.— "திக்கெட்டும் புகழ் படைத்த திறல்விசயன் புயலனைய கையன் றெவ்வைக், கைக்கொட்டி நகைக்குமிகற் கார்வெட்டி யரையனவ ணாடற் கேற்ப, பொசகெட்டும் பத்து மிலான புகழ்தருமந் தீர்த்தன்மலர்ப் பதம்பூ சிப்போன், சொற்கெட்டா வரன் றோலா மொழிசூளா மணியுணர்வோர் துறைகண் டோரே." இனி யிந்நூல் சீவகசிந்தாமணி போல விருத்தயாப்பி னியன்றதும் சொற்பொருட் செறி வுடையதுமாகிய வொரு செந்தமிழ்ப் பெருங்காப்பியமாம். சிந்தாமணி நூல கத்துச் சிறப்புடையரசனைச் 'சிந்தாமணி' யென்றல் போல இதனகத்தும் சிறப்புடையரசன் 'சூளாமணி' யெனப்படுகின்றனன். **யாப்பருங்கல விருத்தியுரையினும், யாப்பருங்கலக்காரிகையுரையினும், சிலப்பதிகார வடியார்க்கு நல்லாருரையி**னும் இந்நூற்பாக்கள் மேற்கோள் காட்டப்பட்டுள. இந்நூலின் விருத்தத்தொகை-உஉகக. **மாபுராண** மெனனும் சைன முதனூ லிற் சுருங்கிக் கிடந்ததை விரித்தல் நூலயாப்பிணுற் செய்தன ரென்ப. இது கடவுள் வாழ்த்து, பாயிரம், நாட்டுச்சருக்கம், நகரச்சருக்கம் என்னு மிவை தவிரப் பத்துச்சருக்கங்களுள்ளது.

சுரமை நாட்டிற் போதன நகரின்கட் பயாபதி யென்னு மோரரசன் மிகாபதி சசி யென்ற இருமனைவியரிடத்தும் முறையே விசயன், திவிட்டன் என்ற மக்களிருவரைப் பெற்றன னென்பதும், இவர்தமுள் இளையோனாகிய

திவிட்டனுக்கு வித்தியாதரராச னொருவனது மகள் சயம்பவை யென்பாள் மணஞ்செய்விக்கப் பெற்றன னென்பதும், அதன் பின்னர் முன்னமே தன்னொடு முரணிய வித்தியாதரச சக்கிரவர்த்தியொடு திவிட்டன் பொருது அவனை வென்று வித்தியாதர வுலகினைக் கைப்பற்றி அதனைத் தனது மாமனுக்கு அளித்தன னென்பதும், பயாபதி தன் மக்களிடத்து இராசபாரத்தை நிறுவின னென்பதும், திவிட்டன் கோடிக்குன்றம் பறித்தேந்தின னென்பதும், திவிட்டன் சயம்பவையினிடத்து அமிததசேன னென்னு மகனையும் சோதிமாலை யென்னும் மகளையும் பெற்றன னென்பதும், இவர்கட்கு முறையே சடியரசன் மகளும் அருக்ககீர்த்தியின் மகளையும் மகனையும் மணஞ்செய்வித்தன னென்பதும், பயாபதி துறவுபூண்டு முத்தி யெய்தின னென்பதுமாகிய சரிதம் இந்நூலின் கண்ணே மிகவுஞ் செவ்வனே விரித்துப் புனைந்து கூறப்பட்டுளது. இதன்கண் ஆங்காங்குச் சில பண்டைக்கால வழக்கங்களும், சைனமதத்தின் ஒழுக்கங்களும், அரசாட்சி செய்யும் முறையும் காணப்படும். உதாரண முகத்தால் உலகியனெறியு மொருவாறு சுட்டப்பட்டுளது.

இக்காப்பியத் தலைவனான திவிட்ட னென்போன் ஆருகத மகாபுராணத்திற்கூறிய நவவாசுதேவர்களுள் முதல்வனான திப்பிரஷ்ட வாசுதேவனெனவும், திவிட்டனுக்குப் பகைவனான அச்சுவகண்டன் நவப்பிரதி வாசுதேவர்களுள் முதல்வனான அயக்கிரீவப் பிரதிவாசுதேவ னெனவும் கூறப்படுகின்றனர். இந்நூலிற் சீயவதையும் வித்தியாதரவிவாகமும் சேடியார் சங்காரமும் முதலாயின வெல்லாங் கண்ணபிரானது சரித்திரத்திற் சொந்தனவல்லவாயினும் திவிட்டராசன் நிறமுங் குணாதிசயங்களுந் திருமாலின் அவதாரமாகிய கண்ணனதும், திவிட்டற்குத் தமையனாகிய விசயனது நிறமுங் குணாதிசயங்களும் கண்ணன் முன்றோன்றாயபலராமனதுமாகிய இலக்கணங்களோடு பெரும்பாலு மொத்திருக்கும். பலராமகிருஷ்ணரிற் கிருஷ்ணனுக்குச் சிறப்புமிகுமாறு போல ஈண்டுந் திவிட்டற்குச் சிறப்பு மிக்கவாறு கண்டுகொள்க. சிந்தாமணியிற் சீவகன் பலரு மெடுக்கற்கரியதோரா கல்லினைக் கையகத்தேந்தியாடினமையும் சாந்தருவதத்தை யென்ற வித்தியாதரமங்கை மணந்துகொண்டமையும் இந்நூலில் திவிட்டன் கோடிக்குன்ற மெடுத்தமையினையும் சயம்பவையினை மணந்துகொண்டமையினையு மொக்குமாறுணர்க.

## புறவுரை—பாகம்-1.

**புறவுரை** யென்பது நூலகத்துக் கூறப்படாத சில்பொருள்களை நூலுக்குவெளியே தனியேசொல்லுவதாம். "முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம், **புறவுரை** தந்துரை புனைந்துரை பாயிரம்" என்றார் **நன்னூலார்**; ஆதலின் இவை யனைத்தும் ஒருபொருட் சொற்களென்றுணர்க.

இலக்கியம்—'லக்ஷ்யம்' என்னும் ஆரியச்சொற் றிரிபு. இலக்கணத்திற்கு இடமாவதென்பது பொருள். காப்பியம்-காவியம். மாணவர்-மாணாக்கர். கதியம்-வசனம். பகிரங்கஞ் செய்தல் - வெளிப்படுத்தினால். சாவகாசம் - Leisure

## பாகம்-2.

சென்னைச் சர்வகலாசங்கத்திற் பிரவேசபரீக்ஷை - The Matriculation Examination of the Madras University. நியமிப்பான-ஏற்படுத்தும் பொ

ருட்டு. திராவிட பாடசபையார்-The Dravidian Board of Studies. தற்கா லவித்யாக்கிரமம் - இக்காலத்துக் கல்வியின் முறைமை. பூகோளசாஸ்திரம்-நிலவுலக வுருண்டையைப் பற்றிக்கூறும் நூல், Geography ககோளசாஸ்திரம் - வானத்தினகணுள்ள சூரியன் சந்திரன் முதலிய மண்டலங்களைப் பற்றிக்கூறும் நூல் Astronomy, கம் - வானம், கோளம் - உருண்டை. சத்த சப்த, வீபூ தீவகம் - தீவு, தயிபம் 'சத்த' என்னும் அடைமொழியைத் தனித்தனி சமுத்திரத்தொடும் தீவகத்தொடும் அசலத்தொடுங் கூட்டியுரைக்க. அசலம் - மலை, சலிப்பில்லாதது என்பது உறுப்புப்பொருள். விரவி - கலந்து மாசாந்தரம் மாசத்தோறும் சம்புடம் - Volume. மெச்சி - 'மெய்ச்சி' யெனவும் வழங்கும், கொண்டாடி பஞ்சதந்திரக் கதை - தாண்டவராய முதலியார் செய்தது திரிசொற்பிரயோகம் - திரிசொற்களை அங்காங்கு உபயோகித்தல், திரிசொல் இயற்சொல்லின் வேறுபட்டசொல், திரிதல் வேறுபடுதல், வேறுபடுதலென்றது இயற்சொற்போல இயல்பாலுணரப்படாது அரிதின் உணரப்படுதலை [நன் பெய 15.] அர்த்தம் - பொருள், meaning அருத்தி - அருமைப்படுத்தி, 'அருத்தி' என்பதன் பிறவினை ஒருபொருட் பன்மொழி ஒருபொருளைக் குறித்த பலசொற்கள் இவை சிறப்புப்பற்றி யுபயோகிக்கப்படுவன "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின்வழா" என்றார் நன்னூலாரும். வரைந்தால் - எழுதினால். பெருக்கி, அருக்கி, நெருக்கியென எதுகைத்தொடைக்குரிய சொற்கள் அடுக்கடுத்து நசமை **விருத்தியநுப்பிராசம்** என்னுஞ் **சொல்லணி**யாகும், அஃதாவது எழுத்து ஒன்றேனும் பலவேனு மிடையிட்டுப் பலகால் வருவது. பிரதமவித்தியா பரீக்ஷை - First in Arts Examination. அருகம் - தகுதி, யோக்கியம். முதனூல் ஈங்குச்செய்யுட்சூளாமணி பல்லாற்றால் - பலவிதத்தினால். திரித்து - திரிசொற்களுடைத்தாக்கி. பரியாயங்கள் - பொருளொருமையுள்ள வேறு சொற்கள் பிற - Synonyms தெரித்து-தெரிவித்து கமழ - மணக்க வரித்து - விரும்பி மேற்கொண்டு விரித்து, திரித்து, தெரித்து, வரித்து என்றமையும் அவ்வணியின்பாற்படும் இரண்டுபட்டு - வேறுபட்டு சான்று - சாட்சி ஆன்றோர் - அறிவு நிறைந்த பெரியோர் மன்னித்தல் - பொறுத்தருளல், இது உலகவழக்குச் சொல்லேயன்றிச் சான்றோர் செய்யுள்களிற் பயின்று வாராமை காண்க

## சூளாமணி.—பாயிரம்-1

**தற்சிறப்பு** - தன்னைப்பற்றிய சிறப்பு அல்லது தன்னுடைய சிறப்பு; ஈண்டுச்சிறப்புப்பாயிரமாம் இது ஏனையுஞ் செய்யலாம் இதன் கண்ணே பெரும்பாலுங் கடவுள் வாழ்த்துஞ் செய்பொருளுங் கூறப்படுதல் வழக்காம் என்னை? "செய்வவணக்கமுஞ் செயப்படுபொருளு, மெய்த வுரைப்பது தற்சிறப்பாகும்" என்பதிலக்கணமாமாதலின். இச்செய்யுளின் கண்ணும் அவை காண்க இச்செய்யுள் வசனநூலாசிரியர் செய்து கொண்டதாம்

1 **உரை**:—சோலை ஆனனத்தான் தொழ - யானை முகத்தையுடைய விநாயகக்கடவுளை யான் வணங்குதலான், கள் ஆவிழும்வெள்ளமரை காரிகை- தேன்றுளிக்கும் வெண்டாமரை மலரில் வாழ்கின்ற அழகுடையவளாகிய சரசுவதி, மேவும் - விரும்பியுதவுவாள், கனிந்த தெள்ளுதமிழ் கொள்ளை உபயோகத் இலங்கும் - மிகவுமினிய தெளிவான தமிழ்மொழியின் மிக

*மேம்பட்ட செல்வங்கள் [சொற்செல்வம் பொருட்செல்வம்] கூடிவிளங்கும்; (ஆதலின்), தோலாமொழித்தேவர் சூளாமணிச்சரிதம் - தோலாமொழித்தேவர் பாடிய சூளாமணியென்ற காப்பியத்தின்கட் கூறப்பட்ட சரித்திரம், மெள்ளவரும் - மெதுவாக [ஒருவிதவிடையூறுமின்றி] (எழுத) வரும்.*

**குறிப்பு.**—*கள்ளவிழும் வெள்ளைமரை, தெள்ளுதமிழ்க் கொள்ளைவளம் இவை* **சேகாநுப்பிராசம்** *என்னுஞ் சொல்லணியின்பாற்படும். சேகாநுப்பிராசமாவது இரண்டிரண்டு மெய்கள் உயிரேறப்பெற்று இடைவிடாது மடுத்துவருவது. மரை - 'தாமரை' யென்பதன் முதற்குறை. விநாயகக்கடவுளை வணங்கவே நாமகள் தானேவந்துதவுவாள், சொற்பொருட் செல்வங்களுந் தானே வந்தெய்துமென அக்கடவுளின் அருள் வல்லபத்தைச் சிறப்பித்துச் சொல்லியபடியா மென்பதுணர்க; இதுநுதலிப்புகுதலென்னு முத்தி, ஆகவே, இது தற்புகழ்ச்சியாகாது. இவ்வாறே "நான்முகற்றொழுது நன்கியம்புவனெழுத்தே" யென்றார்* **நன்னூலாரும்.** *சரஸ்வதி, பெருமானது அருள்வழி நிற்பாளென்பதனை "ஞானவாணிவந் திறுத்தன ளென்பர்தந்நாவில்" என்ற* **திருவிளையாடற்புராணச்** *செய்யுளானுமறிக. மெள்ள-'மெல்ல' வென்பதன்போலி, 'அலமரு' என்பதை 'அளமரு' என்றாற் போலக்கொள்க. "அளமருபிறப்புக் கமலறக்குய்த்திடும், வளமலர்" என்றார்* **தணிகைப்புராண***முடையாரும். 'மெள்ளவரும்' என்பதனோடு அவையடக்கமு மொருவாறு கூறப்பட்டமை காண்க. இனி 'மேவும்', 'இலங்கும்' என்பனவற்றைப் பெயரெச்சமாக்கிப் பொருளுரைத்தலுமாம். பின்னீரடியினும்* **அடிமுதன் மடக்கணி** *யுண்மையுணர்க. இது நேரிசைவெண்பா.*

**காவியக்காப்பு** :—*சூளாமணிக் காப்பியத்தின்கணுள்ள காப்புச்செய்யுள். காப்பு - காத்தல், இது காக்கின்றகடவுள் விடயமான வணக்கத்திற்குத் தொழிலாகுபெயர். இச்செய்யுள் தோலாமொழித்தேவர் செய்தது.*

**2. உரை** :—*வினையின்றொகை வென்றுள ஆகி - கருமங்களின் றொகுதியைச் சயித்தவனாய, ஒன்று ஆய தன்கண் விரிந்து பரந்த - ஒப்பின்றித் தனிமைத்தாகித் தன்னிடத்தினின்றும் வியாபித்துப்பரவிய, உணர்வின் ஒழியாது முற்றும் சென்றுள - தனது பேரறிவினாற் குறைவற யாவற்றையுமறிந்து கொண்டவனும், திகழும் சுடர்சூழ் ஒளி மூர்த்திஆகி - விளங்குகின்ற பிரபாமண்டலத்தாற் சூழப்பெற்ற ஒளிமயமான வடிவுடையவனுமாகி, நின்றுள அடிக்கீழ் பணிந்தார் - அழியாதுநின்ற அருகக்கடவுளினது திருவடிகளிலே வணங்கினவர், வினைநீங்கிநின்றார் - (இரு) வினையு மொழிந்து (முத்தியுலகினழியாது) நிலைபெற்றவராவர்.*

**குறிப்பு** :—*இஃது அருகசரணம், சித்தசரணம், சாதுசரணம், தன்மசரணமென்னும் நால்வகைச் சைனவணக்கங்களுள்* **அருகசரண***மாம். வினையின் றொகையை வென்றுளாகிச் சென்றுள நின்றுளமாகியவனது அடியெனக் கூட்டிக்கொள்க. 'வினையின் றொகையாய' வென்பதூஉம் பாடம்; அதற்கு வினையின் றொகையாயவற்றை வென்றுளுஞ் சென்றுள நின்றுளு மெனக்கொள்க. வென்றுளாய பின்னரே மற்றவியல்புகள் நிகழ்தலின் 'ஆகி' யென்னும் பாடமே சிறப்புடைத்து. 'தொகையாய' என்று பாடங் கோடல் சந்தத்திற் கொவ்வாதென்றொழிக. விரிந்துபரந்த - ஒருபொருட் பன்மொழி.*

தன்கண் - வேற்றுமையுருபு மயக்கம். ஒன்று-அத்விதீயம், ஏகம். 'அடைந்த பொருளவாகு சொற்கள் அறிந்த பொருளினவுமாம்' என்ற வடமொழி நியாயத்தின்ற 'சென்றான்' என்றதற்கு அறிந்தவ னென்றுரைத்தாம். இனி யானமகோடிகளின் அறிவிற்சென்று கலந்தவ னெனினுமாம். உணர்வின : இதன்கணுள்ள ஏதுப்பொருளினதாகிய 'இன்'னுருபை யொப்புப் பொருளினதாக்கித் தன்னிடத்து ஒன்றேயாய விரிந்து பரவிய அறிவினைப் போலத்தான் உலக மெங்கு மிடைவிடாது பரவிச் சென்றவ னென்பது மொன்று. பிரபாமண்டலமாவது சந்திராதித்தியர், நித்தியவிநோதம், சகல பாசனம் என்னும் மூன்று பிரகாரங்களையுடைய வொளிவட்டமாம். அருகக் கடவுளின் வடிவம் இவ்வாறு ஒளிவட்டத்தாற் சூழப்பட்டிருக்கு மென் பதனை யிந்நூல் துறவுச் சருக்கத்தினுங் காண்க. 'அடிக்கீழ்' என்பதற்கு 'அடிகளை' யென வேற்றுமையுருபு மயக்கமாகப் பொருளுரைத்தலுமாம். நின்றார்; தெளிவும் விரைவும் பற்றிய கால வழுவமைதியாம். 'உணர் வின னொழியாது' என்புழி னகர வொற்று விரித்தல் விகாரம். 'நீங்க நின்றார்' என்ப பாடமோதுவாரு முளர். அது சிறவாமை யுய்த்துணர்க. இது கலி நிலைத்துறை.

---

## முதலாவது : குமாரகாலச் சருக்கம்.

குமாரரது காலத்தைப்பற்றிய சருக்கம் என்பது பொருள், அன்றிக் குமாரராயிருந்த காலத்தைப்பற்றிய சருக்க மென்பதூஉமாம். பின்னதே சிறப்புடைத்து; 'கௌமார காலச்சருக்கம்' என்றிருத்தல் மிகவும் நேரிது. இதன்கட் காப்பியத்தலைவனாகிய திவிட்டனது இளமைப் பருவத்துச் செய்தியும் அவன் றமயன் விசயனது இளமைப்பருவத்துச் செய்தியும் பிறந்து வளர்ந்தமை முதலாயினவுங் கூறப்படுகின்றன.

பரதகண்டம்: (இந்தியாதேசம்) நவகண்டங்களு ளொன்று. நாபிமகா ராசனது பேரனும் ருஷப மகாராஜனது மகனுமாய பரத மகாராசன் பூர்வம் ஆண்ட இடமாதல்பற்றி யிப்பெயரத்தாயிற்றென்ப. இனி யிப்பரதன் சகுந்தலைக்கும் துஷ்யந்தனுக்கும் பிறந்தவ னென்றுங்கூறுப. கண்டம்-பாகம்.

முடி - கிரீடம். Crown மலிந்து - நிறைந்து. படிகின்ற - தங்குகின்ற. கோடிகுன்றம்-ஒருமலை. இதன் வரலாற்றை அரசியற் சருக்கத்திற் காண்க. [வசன சூளாமணி 105, 106-ஆம் பக்கம் பார்க்க.] அகழ்ந்து - பறித்தெடுத்து. என்ப - என்று (பெரியோர்) சொல்வார்.

பக்கம்-2

சிரோரத்தினம்: சிகாமணி: தலைமேலணியும் இரத்தினாபரணம். பூதனம் - Bhutan. மாடம்: உபரிகை. கூடம்: சிகரம். விநோதம்: புதுமை. செல்வ மிகுதியும் இன்ப மிகுதியும் பற்றி வித்தியாதரவுலகு உவமிக்கப்படும். நிகழ்வதை-நடப்பதை. நிதியெனப் படுவவெல்லாம்-நிதியென்று சொல்லப்படுவனயாவும். நிதி - பொருட்குவை ; சங்கநிதி பதும நிதிமுதலாயின. இளைப்பாறி : இதுகாறும் அவை யெல்லாம் ஒருவரினின்று மொருவராக மாறி

மாறி வந்து கொண்டிருந்ததனா லுண்டாகிய இளைப்பு கண்படை கொள்ளும்: கண்மூடிக் கொண்டு தூங்கும், அஃதாவது உணர்வுகள் அவ்விடம் விட்டுப்பெயர்ந்து செல்லாவென்பது. ஆயிரம் நாவுடையோர்: ஆதிசேஷர் பலர். விரித்துரைத்தற்கு: விஸ்தரித்துச் சொல்லுந் தன்மையை யுடையது. அரதனாதிகள்: இரத்தினம் முதலியன. அரதனம்=ரத்நம். அரதனாதி=தீர்க்கசந்தி. வேற்றுமை - வித்தியாசம், பேதம். இந்திரபுரி: இந்திரன் நகர், அமராவதி. அந்தரபுரி: ஆகாயத்துச் சஞ்சரிக்கும் நகரம். ஆண்டு: அங்கு, வதிந்தாற்போல - தங்கினாற்போல. மன்னுயிர்: இவ்வுலகின்கண் நிலைபெற்ற பிராணிகள். ஓம்பும்: பாதுகாக்கும். பயாபதி அபிதானம்=பிரஜாபதி யென்னும் பெயரையுடைய. பயாபதி=பிரஜாபதி யென்னும் வடசொற் றிரிவு. சனங்களுக்கெல்லாந் தலைவனென்பது பொருள். மன்பதைகள் சனங்கள், மக்கள் தொகுதி (Mankind) மன்பதைகளாகிய வுடலுக்கு என ஏகதேசவுருவகத்தைப் பூர்த்திசெய்து கொள்க. மதனவேள் - மன்மதன். பூங்கணை: மலரம்பு. வயவேந்தர் வலியவரசர், வெற்றி மன்னருமாம். நலிபவர் வருந்துவோர். தத்தம: தங்கள் தங்களுக்குரிய தருமநெறி தருமமார்க்கம். ஆறிலொன்று கடமைகொடுத்தல் பிதிரர், தேவர், விருந்தினர், சுற்றத்தார், தான், என்றுசொல்லப்பட்ட ஐந்திடத்துஞ் செய்யும் அறநெறியை வழுவா மற்செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமா மென்பது "தென்பு லத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங், கைம்புலத்தா றோம்பறலை" என்னுந் தேவர்திருமொழியா லுய்த்துணரக் கிடத்தலின் மேற்கூறிய வைந் திடத்தும் செய்தற்கு கடமைகளைச் செய்தற்கு ஐந்துபங்கு வேண்டியது ஒருதலை யாதலின் குடிகளது வருவாயுள் ஆறிலொரு பாகமே (One-Sixth) அரையற்குரிய இறைப்பொருளாமா றுணர்க. தாமாகவே: ஏகாரம் பிரிநிலைப் பொருளது. கடமை கப்பம் (Duty). இறை வரி (Tax). 'கிடையாது' என்னும் பதத்தின் பின்னர் ஒரு முற்றுப் புள்ளியினைப் பெய்துகொள்க. காரணச்சிறப்புப்பெயர். ஒரு பொருளைக் குறித்தற்குக் கடவுளானும் அறிவுடை யோரானும் இட்ட குறியாகிய பெயர் இடுகுறிப் பெயர். காரணத்தான் வரும் பெயர் காரணப்பெயர். அங்ஙனமாய காரணப்பெயர், காரணப்பொ துப்பெயரென்றும், காரணச் சிறப்புப்பெயரென்றும் இருவகைத்தாம். உ-ம். அணி - காரணப் பொதுப்பெயர், முடி-காரணச் சிறப்புப்பெயர். ஈண்டு அப்பெயர் அம்மன்னனையே குறித்து நிற்றலின் காரணச்சிறப்புப் பெயரா மாறுணர்க. அஃது: அப்பெயர். அவ்வாறொழுகும் நாளில்: அவ்விதமாக நடக்கும் நாளில்.

பக்கம்-3.

இணையாகிய: சமானமாகிய. மிகாபதி: ம்ருகாபதி என்னும் ஆரியச் சொற்சிதை வென்ப. சசி: "ஈயீ றிகரமும்" என்றதனானே 'சசீ' யென்பது இங்ஙனம் வந்தது. வரைந்து: மணமுடித்து. சுகுண சௌந்தரிய மாதர் நற்குணமும் நல்லழகும் வாய்ந்த மகளிர். மாதர்: அழகுடையவர்கள். காமக் கிழத்தியர்: கிழமை - உரிமை, காமவின்பந்தரும் உரிமைமகளிர். வசந்த காலம்போன்றது இம்மன்னனது அரசாட்சிக் காலமென்று விரித்துரைத்துக் கொள்க. அணிபெற: அழகுதயங்க. இலகுவது விளங்குவது. பூங்குழை மகளிர்: அழகிய குண்டலமணிந்த மங்கையர். மகளிர். இர் ஈற்றுப்பல்லோர் படர்க்கைச்சொற்களு ளொன்று cf பெண்டிர், புத்தேளிர். பொன்பலர் மண்

க்கொம்பு: பொன்னாலாய மலர்கள் நிறைந்த மாணிக்கத்தா லியன்ற பூங் கொம்பு, பொன்மலர், அவயவங்களுக்கும் ஆபரணங்களுக்கும், மணிக் கொம்பு, மாணிக்கவெயில் விரிக்கும் உடம்பிற்கும் உவமை. மானவும்: போலவும்; "போலப்புரைய" என்னுஞ் சூத்திரத்தானுணர்க. அன்னோர்: பூங்குழைமகளிர். திலதம் - திலகம், நெற்றிப்பொட்டு. திகழ்ந்தனர்: விளங் கினர். திருமகள்: இலக்குமி. நவீனம் புதிது. (பிராசீனம்-பழையது) பொ லியும்: திகழும். மழலைச்சொல். நிரம்பா மென்மொழியாங் குதலைச்சொல். ஆவி உயிர். மனத்தினுட் பிணிக்கப்பட்ட அரசன் மனமாகிய சிறையின்க ண் ஆசையாகியபாசத்தாற் கட்டுண்டு கிடக்கும் மன்னன். கற்பகம்: இரப் போர்க்கு வள்ளலெனக்கொடுக்கும் தெய்வத்தன்மை வாய்ந்த ஐந்தருவி னுளொன்று இம்மரங்கள் பாற்கடற்றோன்றிய அமுதுடன் பிறந்தவை "சந் தானந் தேவதாரு கற்பகம் -மந்தாரம் பாரிசாத மைந்தருவருக்கம்." "இம் மரமைந்துந் தெய்வமரமென்ப" காமவல்லி = "கற்பகஞ்சேர் கொடிகாம வல்லி"யாம். கற்பகம் மன்னற்கும், கொழுந்து காமவல்லிகள் மன்னனிரு மனைவியர்க்கு முவமை. பயாபதி மன்னன் கற்பகம் போற் றன்னிலையிற் பிற ழாது நின்று வள்ளன்மையுடையனாந் தன்மையையும், அவன் மனைவியர், கொழுந்தும் வல்லியுந் தாமணைந்த தருவையே சார்பாகப்பெற்று வளரு மாபோல, அவனையே பற்றுக்கோடாக விழைந்து இன்னலற்ற சிறப்புற்ற மையையுந் தெரிக்கும் உள்ளுறையுவமம் நயத்தைத் தெள்ளிதினுணர்க. வாழ்க்கை: கை, தொழிற்பெயர் விகுதி. பேறு. பயன், தவப்பேறு. தவத் தின்பயன். சுரலோகம் சுவர்க்கலோகம். பலபத்திரன்: பலராமன்; வலிமையிற் சிறந்தோன் எனப்பொருள்படும்; இவன் வெண்ணிறமுடைய னாதலை "வெண்பளிக்கு மேனியன்" என்பதனானுணர்க.

## பக்கம்-4.

காயா: ஒருவகைமரம். கிருஷ்ணன் கருநிறமுடையோன். கிருஷ் ணம் என்பது கறுப்பு, இஃதிங்ஙனம் பொருள்படுதலைக் கருநாகத்தைக் கிருஷ்ணசர்ப்பமென்றும் கருந்துளசியைக் கிருஷ்ண துளசியென்றும் கூறுதலாலு முணர்க. கிருஷ்ணன் என்னும் மொழி யின் சிதைவே கண் ணன் என்பதை யறிக. முகூர்த்தம் வேளை. நாமகரணம்: பெயரிடுஞ்சடங்கு. காளைப்பருவம் இளமைப்பருவம். "பாலைத்தலைவனுஞ் சிறுவனுங்காளை" என்பதனானறிக. தாமாட்டுப்பிணிப்ப புணர்த்தக்க: தம்மிடத்துக் கட்டுப்படத்தக்க. வயங்கினர் விளங்கினார்கள். துயில் ஓரீஇ: தூக்கம் நீங்கி; சொல்லிசை யளபெடையாம், இதன் சாதாரண ரூபம் ஒருவி. வழிபாடு வணங்குதல், வழிபடு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். அரசவரிசை அரசர்க்குரிய வரிசை, குடை, கொடி, சாமரம், ஆலவட்டம், பரிவாரம் முதலியன. 'போய்' என்னும் வினையெச்சம் பாட்டினிறுதியிலுள்ள புக்கார் என்பதைக் கொண்டுமுடியும்.

## செய்யுள்

**உரை**:—பளிங்கு படிக்கற்களை, ஒளி கதுவ பிரகாசம் மிகும்படி, போழ்ந்த பிளந்தனவாகிய, பலகை பலகைகளை, கண்குலவ இடம் விளங்கும்படி, சேர்த்தி: பொருத்தி, விளங்கு ஒளி விளிம்பின் செம்பொன்: விளங்குகின்ற ஒளியையுடைய விளிம்பிலே செம்பொன் பொருந்திய,

வேதிகை : மேடையினையும், வெள்ளிவேயுள் : வெள்ளித்தகடுகளாலமைந்த விதானத்தையும், துளங்கு ஒளி : அசைவதுபோல் விட்டுவிட்டு மிக்க கூர்ந்திலையைப்பரப்பும், பவழத்திணைகால் : வலிய பவளக்கால்களையும், சுடர்மணித்தவழும் பூமி : கிரணங்களைப் பரப்புமணிகள் அழுத்திய அடியிடத்தையுமுடைய, வளம் கவின்று அனையது ஆய செல்வப்பொருள் அழகியவடிவுடன் திகழ்ந்தாற்போன்ற, மண்டபம் மலியப்புக்கான் : கொலுமண்டபம் விளங்கும்படி உட்புகுந்தான்.

**குறிப்பு** :—படிகம் முதலிய கற்களையறுத்துச் சாணைபிடித்த பின்னரே அவற்றின் ஒளி இனிது விளங்குமாதலின் 'பளிங்கொளி கதுவப்போழ்ந்த பலகை'யென்றார். பளிங்கு, ஸ்படிகம் என்னும் வடசொற்சிதைவு. வேயுள் : மேற்கட்டி ; விதானம், தொழிலாகுபெயர். ஈண்டு, உள்-தொழிற்பெயர் விகுதி. பவழம், பரவாளம் என்னும் வடசொற்சிதைவு. கவின்று : இறந்தகால வினையெச்சம் ; கவின், பகுதி - எல்லாவளங்களுஞ் செறிந்த கொலுமண்டபமேயாயினும் மன்னனின்றேற் கவினின்றாமெனபார் 'மண்டபமலியப் புக்கான்' என்றார் 'மண்டபமவிரப்புக்கான்' என்று வேறுபாடங்காட்டுவாருமுளர். புக்கான் பகுதி இரட்டித்திறந்த காலங்காட்டியது; ககரத்தை இறந்தகால விடைநிலையென்று சொள்வார் இலக்கணவிளக்க நூலார். புரோகிதன் : யாவற்றிற்கும் முன்வைக்கப்படுபவன் ; எனவே சுபாசுபங்களிரண்டனையும் முன்னிருந்து நடத்துபவன், இதங்களை (நன்மைகளை) முன்னறிந்து சொல்பவ னெனபாருமுளர். அருகாசனத்தினராயினார் : சமீபித்த இருக்கையராயினார்.

பக்கம் - 5.

விடுக்குதி : அனுப்புவாய். திரிகாலஞானம் : இறப்பெதிர்வு நிகழ்வென்னும் முக்காலங்களையு முணருமுணர்ச்சி. நிமித்திகன் : குறிசொல்வோன்; நிமித்தம் குறி. கடை வாயிற்கடை கங்குல் : இரவு. விசும்பு: ஆகாயம் இழிதல் : இறங்குதல். விஞ்சை : வித்தை ; விஞ்சையராஜன் : வித்தியாதரமன்னன். திருமுகம் ஓலை; சடிதம். புட்பமாகாணடம் : பயாபதிமன்னனது நந்தவனம், மலர்களின் மிகுந்த கூட்டத்தையுடையதென்று பொருள்.

பக்கம் - 6.

வியப்பு : ஆச்சரியம். தகைமை தன்மை. நாழிகைப்பறை : நாழிகை கழிந்ததைத் தெரிவிக்கும் வாத்தியம். மந்திரசாலை : ஆலோசனை செய்யுமிடம். அமாத்தியர் அமைச்சர், மந்திரிகள் ; அருகிலிருப்பவர் என்று பொருள்படும் வடசொல், அமா : அண்மை. சம்பவம் : நிகழத்தக்கது.

ஏகசக்கிரேசுவரன் : தனியே ஆஜ்ஞாசக்கிரஞ்செலுத்தி அரசாள்பவன். ரேகை : கோடு சங்கபாணியன் : பாஞ்சசன்னியமெனனுஞ் சங்கத்தைக் கையிலுடைய திருமால். சங்கை: சந்தேகம். நிகர் : ஒப்பு. பொழில்: சோலை. துருமகாந்தன் : மரங்களுக்கு விருப்பமானவன் என்றுபொருள்; மரங்களைச்செழித்து வளரும்படி போற்றுபவன் என்பதுகருத்து.

பக்கம் - 7.

நல்கி : கொடுத்து. கோயில் : அரண்மனை ; இலக்கணப்போலி. உத்தியானம் : நந்தவனம்.

பக்கம் - 8.

**இரத்நூபுரச்சருக்கம்** :—இரத்நூபுரமென்னும் விஞ்சையர்புரியில் நிகழ்ந்தசெய்தியினைத் தெரிவிக்கும் பாகம்.

## செய்யுள்.

**உரை** .—மருசுரேராயவரை : மேகங்களவந்து படிகின்ற (உயர்ந்த) அம்மலையில், மைந்தரோடுஆடிய காரிகையருடன் விளையாடிய, அபசிலஒதியர். அழகிய பொன்வட்டத் கட்டணிபொருந்திய கூந்தலையுடையமங்கையரது, ஆர் அரகம நிறைந்த முன்னேற்றியமயிரின்மேல் (பொருந்திய), பொடி : வாசனைப்பொடி, பஞ்சராகம ஐவகை நிறமபடைத்த இரத்தினங்களா, பதித்த . (பலவேறுவிரமாய) பதிக்க, பளிங்கு அறை . படிகத்தாலாகிய அறையிலே, அருசு பொருந்திக்கிடக்கும், பாறைகள் மேல . கற்பாறைக ளின்மேல், துறைவுறறது . சிந்திமிக அடர்ந்து கிடந்தது.

**குறிப்பு** .—மருசுரேராயவரை **தொடர்புயர்வு நவிற்சியணி** ; இதனை வடநூலார 'சமபந்தாதிசயோகதி யலங்காரம்' என்பர். அபசிலோதி அழகிய சில்வானமயிரினையுடையாள என்பர் **நச்சினார்க்கினியர்.** இனிஅரிய குளிர்ந்த கூந்தலையுடையாள என்றுரைத்தலு மொன்று ர.கம நிறம். ஈண்டு நிறத்தையுடைய அரசனுக்கு ஆகுபெயர். பளிங்கு + அறை.பளிக் கறை ; "மென்றொடர்மொழியுள" என்னுஞ் சூத்திரத்தானமை க. 'விளிப பறை போகாது மெய்புறத்திடூஉம, பளிக்கறை மண்டபம்" என்னும் **மணி மேகலை** யடிகளாற் பளிக்கறையிப்பெயமை யீண்டறிக.

நாகக்கன்னியர் தேவமகளிர். நாகம் விண்ணுலகம். "நாகமவிண் குரங்கு பனைை நறறுருமலைபாமபியானை." இனிப்பாதலத்துறையும் நாக ச்சாதி மகளிரென்று கூறலுமொன்று. நறுநாற்றம . நல்லவாசனை. கோடு- சிகரம். பொறபிறறு . அழகுடையது விலங்கல .மலை, காரணப்பெயர், ஒரு பக்கலவிலகி நிறபதென்று பொருளபடும். பெயரியது. பெயருடையது. ஈடு: உவமை.

பக்கம் - 9.

பெண்அணங்கு : தெய்வத்தன்மை வாய்ந்தபெண். ஏற்றம் . உயர்வு. பேதைபபருவம ஐந்துமுதல் ஏழாண்டுவரையில், எட்டுமுதல் பதினொன் றளவும பெதுமபைபபருவம. சொயமபிரபை . இயலபில ஒளியுடையாள். செவிலித்தாய . வளர்க்குந்தாய். தாதி . 'தாசி' என்னும் வடசொற்றிரிவு; வேலைசெயபவள் என்று பொருளபடும. இவாந்து : ஏறி. மஞ்சனம : கண்டோர்மனத்தைக் கவர்வதென்று பொருள். மடவார் இளமகளிர். மானும .போலும முருக்கிதழ் : பலாசமபூவி னிதழ். உறழும் : ஒக்கும்.

பக்கம் - 10.

ஏயக்கும் : போலும். இங்ஙனம் ஒக்கும் என்னும் பொருள்படும் பல சொற்கள போந்தமையின **பொருட் பின்வரு நிலையணியாம்.** வர்ணிய த்தை அவர்ணியமாகவும், அவர்ணியத்தை வர்ணியமாகவும் உபசரித்த மையிற் புகழ்பொருளுவமை யணியாம். வனப்பு : அழகு. கண்ணி : மாலை. •சினகரம் . கோயில், ஜிநாலயம் ; ஜிநக்ருஹம என்னும் வட

சொற்றிரிபு. பூப்பலி. பூவாகியபலி ; கடவுட் பூசைக்குரியபொருள்: பிரதக்கணம : வலமாகச்சுற்றிவருதல் இசைத்து சொல்லி. நிருமாலியம்: உடயோகித்தமிகுதி. கபாடபந்தனம் கதவுசாத்தல. திகம்பரா : திக்கை யேவஸ்திரமாகவுடையோர் சாரணா : சமணமுனிவர், தேவதூதரெனவு மாம். ஆகாயமார்க்கத்தில சஞ்சரிப்பவரென்று பொருள்படும் இவர் எண் வகைப்படுவரென்பர் அடியார்க்கு நல்லார்; இவர்கள் இவ்விருவராகச் சென்று இவ்வுலகினர்க்குத் தருமோபதேசம செய்வதியல்பு. சிலாதலம : இந்து காந்தககற்பதித்த மேடை. சாரணா வரவு கருதி ஜினாலயங்களில அவா சார்ந்திருந்து கடவுட்பூசை செய்ய அமைத்தது என்பர். "ஐவகை நின்ற வருகத்தானத்துச், சந்தியைந்தும தம்முடன் கூடி,வந்து தலைமயங்கிய வான பெருமன்றத்துப, பொலம்பூம பிண்டி நலங்கிளர் கொழுநிழல், நீரணி விழவினும நெடுந்தோ விழவினும், சாரணர் வருஉந்தகுதி யுண்டாமென, உலக நோன்பிக ளொருங்குடனிட்ட, இலகொளிச்சிலாதலம்" என்பது சிலப்பதிகாரம் நாடுகாண்காதை. ஆசி வாழ்த்து. இருத்தி. உட்காருவாய.

## பக்கம். 11.

வேண்டுகோள் : Request. திறம : தன்மை. வாயில் : மார்க்கம காட்சி ஞானம, கிளர்ந்தது பிரகாசித்தது. அநந்தரம பின்பு நேராக இப்புறம். சங்கற்பித்தாள் : நிச்சயித்தாள். ஜகதபிநந்தனா உலகத்தை மகிழ்விப்பவர். ஜகநந்தனா அபிநந்தனா என்பவைதா மவர்கள் பெயர்கள். சுசிய : ஒழுக. பாஷ்பம கண்ணீர்.

## பக்கம். 12.

### செய்யுள்.

1. **உரை** :—ஆதி அம்கடவுளை : யாவற்றிற்கும் முதன்மையாகிய அழகிய கடவுளாக வுள்ளாய ; அருமறை பயந்தனை : அருமையாய வேதங்களை யீந்தருளினாய்; போதி அமகிழவனை . ஞானத்துக்கு உரிய இருப்பிடமானாய்; பூமிசை யொதுங்கினை தாமரைப்பூவின்மேற் சென்றருளினாய்; போதி அமகிழவனே—, பூமிசை ஒதுங்கிய—, சேதி . செய்கையையுடைய, அம்செல்வ : அழகிய செல்வனே, நின திரு அடி வணங்கினம : உனது அழகிய பாதங்களை வணங்கினம்.

**குறிப்பு** :—அம் : சாரியை. போதி மரமெனின் புத்தனுக்குரித்தாதலின் சண்டுத் தகாமைகாண்க. அருகன தாமரையின்மேல் ஊர்ந்து செல்பவன் என்பர் சைனர். சேதி : செய்தி யென்பதன் மரூஉ.

2. **உரை** :—காமனை கடிந்தனை - மதனை வென்றாய் ; காலனை காய்ந்தனை : யமனைச்சயித்தாய் ; தேமலர்மாரியை : தேன்மிகுந்த பூமழையைச் சொரியப்பெறுவாய், திருமறு மார்பனை : அழகிய வடுக்களை யுடையமார்பையுடையாய் ; தேமலா மாரியை—, திருமறு மார்பனே—, மாமலர் வண்ணம் நின்மலர் அடிவணங்கினம் : சிறந்த தாமரைபோன்ற நினது பதமலர் வணங்கினும்.

**குறிப்பு** :—இதனுனே அருகக் கடவுள் இவ்வுலக இன்பத்தை வெறுத்தவனென்றும் அழிவிலலாதவனென்றும் புலப்படும். இவன மறுப்புனைந்திருத்

தலைச் "செம்பொன்வரைமேற் பசும்பொன் னெழுத் திட்டதேபோ, லம் பொற் பிதிர்வின் மறுவாயிரத் தெட்டணிந்து, வெம்புஞ் சுடரிற் சுடருந் திருமூர்த்தி" என்ற சிந்தாமணியின்கண் தேவருரையானு முணர்க.

3. உரை :—ஆர் அருள் பயந்தனை · மிகுந்த கருணையைச் செய்தலு டையாய், ஆழ்துயர் அவித்தனை · மிகுந்த துன்பத்தை நீக்கினாய்; ஓர் அருள் ஆழியை ஒப்பற்ற கருணைக்குக் கடல்போன்றனை; உலகு உடை ஒருவனை உலகமுழுதும் தனதென்றுடைய ஒப்பற்றவனாயிருக்கின்றனை; ஓர் அருள் ஆழியை,—உலகு உடை ஒருவனை—, சீர் அருள் மொழிய : சிறந்த (நினது) கருணைமொழிகளை (எமக்கு) அருளுகின்றதற்கும் பொருட்டு, நின் திரு வடி தொழுதனம் உனது அழகிய பாதங்களை வணங்கினோம்.

குறிப்பு .—'ஓரருளாழியை' யென்பதற்கு ஒப்பற்ற தரும சக்கரத்தை யுடையவன் என்று பொருள் கூறலுமொன்று. இந்தக் கந்தருவ மார்க் கத்தால் இடைமடக்கின தேவபாணிக்கொச்சக வொரு போகின்கண் வந்த மடக்குக்கள் அன்பின் மிகுதி பற்றியாதலிற் கூறியது கூறலன்று.

பிரதாபம் = உயர்வு, மேன்மை. அருங்கலம் . அரிய ஆபரணம்.

ஏந்தல் . காளை. பேரவா பெரியவிருப்பம். விடலை : ஆண்மகன்.

பக்கம் - 13.

செய்யுள்.

இவ்விரண்டடியும் சூளாமணிச்செய்யுளடிகளே.

உரை ·—அந்தணர் ஒழுக்கமும் மறையோரது ஆசாரமும், அரசர் வாழ்க்கையும் மன்னர் தம செல்வவாழ்வும், மந்திரம் இல்லை எல் : மந்தி ரம் இல்லையாயின், மலரும் மாண்பு இல . ஈன்கு பரந்து விளங்கும் மாட்சி மையுடையா.

குறிப்பு —மறையோர் ஆசாரத்திற்கு வேத மந்திரமும் அரச வாழ்க் கைக்கு ஆலோசனையும் இன்றியமையாப் பொருள்களாம். 'மந்திரம்' ஈண்டுச் செம்மொழிச்சிலேடை.

சொல்லேருழவர் : மந்திரிகள். இப்பெயர் இப்பொருளின்கண் திருக் குறளிலும் வந்துள்ளது. (திருக்குறள் 872) சொற்கலப்பையா லுழுதற்றொ ழில் செய்பவர். உழவு ஈண்டு அரசாட்சி.

பக்கம் - 14.

மூன்றாவது மந்திரசாலைச்சருக்கம்.

மந்திரசாலைச்சருக்கம் · ஆலோசனை சபையில் நடந்த செய்தியைப்பற் றிக்கூறும் பாகம். அவர்கள் : ஏவலாளர். அங்ஙனே : அங்ஙனமே என் பதன் விகாரம், அப்படியே. தேர்ச்சித்துணைவர் மந்திரிமார், தேர்ச்சி. ஆலோசனை. உழையர் : மந்திரிமார், உழை - பக்கம்; அருகிலிருப்பவர் என்று பொருள்படும் அமாத்தியர் என்பதற் கொத்தபதம் முதுவர் : முது மையுடையவர்; அறிவில் மூத்தவர். நுணணிய : நுட்பமான. நூலறி வினர் . சாஸ்திரஞானமுடையவர். அறிவினரன்று : இதைச்சிலர் வழுவென் பர், சிலர் வழுவமைதி யென்பர். ஆயினும் அல்லர் என்பது வழாநிலை. புல வர் : அறிவுடையோர், புலம் : அறிவு. பிரபை : ஒளி. கோல் ; செங்கோல்.

ஏனாதியர் மந்திரிகள்; ஏனாதி காவிதி முதலிய பட்டப்பெயர்கள் மன்னனால் தனது மந்திரி சேனாபதியார்க்கு அளிப்பது. நுகம் : நுகத்தடி. விதியார் . மந்திரிமார்; செய்வன தவிர்வன விதிப்பவர். நுணணியார் நுட்பவறிவினோர். உசாவி : ஆலோசித்து. வாயில் வழி. சூழ்ச்சி . ஆலோசனை.

## பக்கம்-15.

மணவாளன் : கணவன். இதன் பெண்பால் மணவாட்டி. நீடூழி . நீண்ட ஊழிக்காலமளவும். நிலவுக : விளங்குக. நாமம் . பெயர். குரவன் . பெரியோன். சூரியகாந்தம் "சூரியனொளியாற் றீப்பொறி கால்வது சூரியகாந்த மெனப்பெயர் பெறுமே." சந்திரகாந்தம் "சந்திரனொளியாற்றண்ணீர் கால்வது சந்திரகாந்த மெனப்பெயர் பெறுமே." உறுதிச் சுற்றம் . நன்மையைச் செய்யும் பந்துக்கள் கதுப்பு கன்னம். மூர்த்தி திருமேனிகொண்டவன்.

## பக்கம் 16.

விழலர் புல்லர், விழலெனனும் புல்லினைப்பார். உழலும் சுழலும். காக்கைமொழி பயனில்மொழி. உத்தரவேதி விருந்தையார் நாட்டின் வடபாகம்.

## செய்யுள்.

**உரை** —மண்இயல் வாழ்நர்க்கு பூமியிற் பொருந்தி வாழ்பவர்க்கு, வான் உலகு ஒப்பது விண்ணுலகை நிகர்ப்பது, புண்ணியம் இல்லார் : நல்வினையற்றோர், புகுதற்கு அரியது . சோதற் கருமையானது, கண்ணிய மேலான, கற்பகக்கானம் கலந்தது கற்பகச்சோலை விரவியது, விண் இயல் இன்பம் இனிது விரவிற்று . விண்ணுலக வின்பம் இனிமையாகப் பொருந்தியது. (அந்நகரம்)

**குறிப்பு** —இஃது அடிமறி மாற்றின்பாற் படும். கண்ணிய : 'கணய' எனனும் வடசொல் ; இனிக 'கண்' 'இட' மெனக்கொண்டு இடமகன்ற என்றும், 'நினை' யெனக்கொண்டு யாவராலும் உயர்வாக நன்கு மதிக்கப்பட்ட என்றும் பொருள் கூறலாம்.

மயூரகண்டன் மயிலினது கழுத்துப்போன்ற கழுத்தை யுடையான். தானை . சேனை, ஆணை . ஆஜ்ஞை. திரிகாலசம்பவம் : முக்காலத்தும் நிகழ்பவை.

## பக்கம்-17.

சீராய் : ஒழுங்காய். சகசம் ஸஹஜம், இயற்கை. ஓச்சுவான் : செலுத்துவான்.

## பக்கம். 18.

ஏந்தல் : அரசன். மேலைச்சார் : மேற்றிசைப்பக்கம் புரவி விஞ்ஞை: குதிரை செலுத்தும் வித்தை, இதனை அசவஹ்ருதயம் என்பர். செம்மல்: அரசன் ; புதல்வனுமாம். செம்மல் - ஆண்பாற் சிறப்புப்பெயர். செம்மை யுடையான் என்பது பொருள். அமிழ்தமாபதி : ஓர் நகர். வேகமாரதன் : வேகமாகச்செல்லும் பெரிய தேரையுடையான் என்பது பொருள். இளங்

கிளியுழுவை: கிளிப்பிள்ளையுடைய இளம்புலி. மேகமாபுரம்: ஓர் நகர்; மேக மண்டலத்தை யளாவிய பெரிய பட்டணம். பதுமரதன்: தாமரை போலும் வடிவமுடைய தேரையுடையான், தேரின் கொடிஞ்சியும் தாமரை வடிவமாயிருத்தலுங் காண்க. இனித்தாமரை மலரை வாகனமாகக்கொண்டமையான் வந்த பதுமரதன் என்னும் அருகக்கடவுளின் பெயர் இவனுக்கிடப்பட்ட தெனினுமாம். ஊழித்தீ: ஊழி காலத்திற்றோன்றி யுலகையழிப்பதொரு நெருப்பு. இரத்தினபுரம்: ஒரு நகரம். இடியேறு: பேரிடி. சுவர்ணரதன்: பொற்றேருடையோன். செங்கண்மால்: சிவந்த கண்களையுடை விஷ்ணு. செயிர்த்தற்கரிய: வெல்லுதற்கு அருமையான. அரிகண்டன்: ஒளி பொருந்திய கழுத்தையுடையான். சேய்: குமாரன். இராசசிங்கம்: அரசசிங்கம், அரசர்களுட் சிறந்தவன், எல்லாப் பகையரசர்களையு மழிப்பவன். நந்தனன்: பிள்ளை. சயந்தன்: இந்திரன் மகன். மதலை: குமாரன். ஏமாங்கதன்: பொன்னாற் செய்த அங்கத்தை யுடையான். மாறுக: எதிராக; காதலன்: மகன். திலதம்: நெற்றிப்பொட்டு. காளை: காளை போல்பவன் உவமையாகு பெயர். திருநிலயம்: ஒரு நகரம், திருமகள் வாழுமிடம் என்றும் செல்வ நிலைக்கப்பெற்ற தென்றும் பொருள்படும், ஸ்ரீநிலயம் என்றும் பெயர் பெறும். சித்திரரதன்: அழகிய தேருடையோன். செற்றவர்ச் செகுக்குஞ் செருவல்லான்: பகைத்தவரை யழிக்கும் போரில் வல்லவன். கான்முளை: மகன், சந்ததியிற் றோன்றியவன் என்பது பொருள். விஞ்சையருலகு: வித்தியாதர லோகம். மணவாளன்: கலியாணஞ் செய்து கொள்வோன். மன்றல் புரிக: கலியாணஞ்செய்க. பவச்சுதன்: சடியரசன் மந்திரி. பகர்ந்தான்: சொன்னான்,

பக்கம் - 19

எஞ்சியோர்: மீதமுள்ளோர், மற்றையோர், எஞ்சுதல்-குறைதல். அஞ்சலியஸ்தர்: கூப்பியகையர். இரங்கை இயம்பெண் புரக்கும்: ஆளும். உய்யும்: பிழைக்கும், இங்கு கடைத்தேறும். வையகம்: பூமி: இஞ்ஞான்று: இக்காலத்தில். அஞர்: துன்பம். காம்பின் மென்றோளி: மூங்கிலை யொத்த மெல்லிய தோளையுடையாள். [illegible]ன் மருமம் மருவுமாயின். அத்தன் மையோன் மார்பை யணைவாளானால். ஆம்பல்: அல்லி. அவிர்கதிர்த் திங்கள்: பிரகாசிக்கின்ற கிரணங்களை யுடைய சந்திரன். சற்குணாலயம்: நற்குணங்களுக்கு இருப்பிடம்

## செய்யுள்.

**உரை.**—நம்பி தங்கை-அரசனாகிய அவ்விச்சுவன் தங்கை [சோதிமாலை], நகை - ஒளிபொருந்திய, மலர் - மலர்களையுடைய, கற்பகக் கொம்பின் அன்னவள் - கற்பக விருக்ஷத்தின் கொம்பினைப் போல்வாள், கொங்கு அணி கூந்தலாள் - (இயற்கை) வாசனையைக்கொண்ட கூந்தலையுடையவள், அம்பின் நீண்டு-அம்பைப்போல நீட்சிமைபெற்று, அரி சிந்திய-செவ்வரி பரவப்பெற்ற, மாகயல் - பெரிய கெண்டைமீன் பிறழுமாறு போலே, வம்பின் நீண்ட - புதுமையால் மிகுந்த, மை-மை எழுதிய, வாள் நெடுகண்ணினாள் - வாளாயுதம் போல நீண்ட கண்களை யுடையவள்.

**குறிப்பு.**—வாடாமைக்கும், மலர்ச்சிக்கும், இன்பந்தருதற்கும், இயற்கைவாசனை யுடைமைக்கும் மலர் கற்பககொம்பு உவமை, இனி, நகைமலர்

கற்பகக்கொம்பி னன்னவள் என்பதற்கு - ஒளியோடு பரவுகின்ற கற்பினை மனத்தே யுடைய பூங்கொம்பினை யொத்தவள் எனறு கூறினுமாம. வமபின நீண்டமை - கூட்டுவாசனையா லதிசரித்தமை யெனினுமொக்கும். செவ வரிபடர்ந் திருத்தல உத்தமப பெண்களின இக்கணம். வரி-இரேகை. வாளா யுத்தத்தை கணகளுக் கொப்பிடுதலின ஆடவரை வருத்துந்தன்மை குறிக்கும்.

## பக்கம் - 20.

### செய்யுள்.

**செய்யுளுரை :**—கோதுஇல் மாலைகள்போல - குற்றமில்லாத பூமாலைகளின்மீது, குதிகொண்டெழு - குதித்தலைக்கொண்டு கிளம்புகின்ற, கீதம மாலைய - சங்கீத ஒழுங்கினையுடைய, கின்னரம-கின்னரம என்னும இசைக் கருவியின் இசையை, வண்டினம் - வண்டுக்கூட்டங்கள், ஊதி - (வாய விட்) டொலித்து, மாலையவாய் - வரிசையாய், உறையும் - தங்கபெறற, குழல் - கூந்தலையுடைய, சோதிமாலைஎன்பாள் - சோதிமாலை யென்னும பெயரினையுடையாள், சுடர்பூணிஞள் - பிரகாசிக்கின்ற ஆபரணங்களையுடைய அபபெண்.

**குறிப்பு** :—இச்செய்யுட்கு வருந்திப் பொருளகூறுவாரு முளா.

அங்கனாரத்தினம பெண்களுக்குள் இரத்தினம்போல்ச சிறந்தவள். வயோதிகன. வயதில அதிகமானவன, விருத்தராப்பியன எனறபடி. வய ஸ × அதிகன. நினைசகுந்தைகயன் அனறு : எண்ணுந் தகுதியுடையோனும அலலன. பெண்ணலங கனிந தொழுகாநினற. பெண்தன்மையின அழகு கனிந்தொழுகாநினற, இனி நலம் நறகுணமாம. அணணலங்களிறறரசன : பெருமையுடைய அழகிய யானைபோன்ற அரசன. வதுவை : கலயாணம். புரியாதிருப்பதும. செயயாதிருபபதும. சுரேந்திரகாந்தம : ஒருநகரம். கடவுளர்தன்மையன : தேவர்களின தனமையுடையோன. சித்திரகூடம். ஒருமலை, அதிசயிக்கத்தக்க சித்திரங்களையுடையதென்று பொருள. அணி விழவு அயாநது : அழகிய திருவிழாவைச செயவித்து. ஆண்டு : அவவிடத்து. முன் : முறபிறபில. பங்கயப்பழனவேலி : தாமரை மலாக ளையுடைய வயல்கள் வேலியாகவுடைய. பவகிரிபுரவலன : பவகிரியென்னு நகரத்தரசன். பயந்த. பெற்ற. மதம்பாயும : மதஜலமபாயும. சயசேனன் : வெறறியுள்ள சேனையுடையோன. பிரிதிமதி : அனபுடையான் எனபதுபொருள். சாசாரம : ஸஹஸ்ராம என்னும் வடமொழிச் சிதைவு.

## பக்கம் - 21.

கடல்தொகை : காலத்தின் வரையறை. இது உலகத்தைக் கடல்கொள்ளுவதைக் காலமாகககொண்டு 17 - கடறெருகையெனறு அளவிட்டதாகக் கொள்ளவேண்டும். அமரர் : தேவர்; மரணமிலலாதவர் எனபது பொருள் போகம். இனபம். நுகர்ந்தவன் : அநுபவித்தவன. வேண்டற்பாலன : விரும்பும் பகுதியுடையோன. வார்பூட்டிய : தோற்கயிற்றாற் கட்டிய, வயிர் : ஊதுகொம்பு. வளை : சங்கு. குழாங்கள் : கூட்டங்கள். நுண்டி : நெருங்கி. நிமித்திகன் : சோதிடன் ; வருங்கால மறிந்துரைப்போன.

**செய்யுளுரை**.—இந்திரன் அனைய - தேவேந்திரனை யொத்த, நீரோய் - தன்மையையுடையோனே! இனி பிறிது எண்ணல் வேண்டாம் - இனிவேறு ஆலோசித்தல் வேண்டுவதில்லை, மந்திரம் நீளுமாயின் - ஆலோசனை அதிகரிக்குமானால், வருவன - வருந்தீங்குகள், அறியல ஆகா - (இன்னதென்று) அறிய முடியா, (ஆதலின்) சந்திரன் தவழ நீண்ட - (ஆகாயத்திற் செல்லும்) சந்திரன் தன்னிடத்தே தவழ்ந்து செல்லும்படி உயர்ந்த, தமனியம் சூலம் நெற்றி - பொன்னினாற் செய்த சூலங்களை நெற்றியிலே யுடைய [உச்சியிலுடைய], அந்தரம் திவளும் - ஆகாயத்தில் விட்டு விட்டுப் பிரகாசிக்கின்ற, ஞாயில் - மதில் சூழ்ந்த, கோயில் புக்கு அருளுக என்றார் - அந்தப்புரஞ்சென் றருளுவீராக வென்று சொன்னார் மந்திரிகள்.

**குறிப்பு**.—'அந்தரமயங்கும்' என்பதற்குத் தெய்வலோகத்தார். இத்தன்மையானதில்லையே யென்று மயங்கப்பெற்ற என்றும் பொருள் கூறுவர். ஞாயில் - சினையாகுபெயர் தமனியம் - தபனீயம் என்னும் வடமொழிச் சிதைவு, எரியில் தபிக்கப்பட்டுப் பொலிவது என்பது பொருள். அந்தரம் - ஆகாயம், பிறபொருளுக்கு இடவாகுபெயர்.

தேன் வண்டின் பேதம். விண்டு இசைபாட : வாய்விட்டுப் பண்ணிசைபாட. ஆரவாரித்தல் ஒலித்தல். அரமகளிர் : தேவமாதர்; அமரமகளிர் என்பதன் விகாரம்.

பக்கம். 22.

கவரி வெண் சாமரை. உச்சிக்காலம் : நடுப்பகல். கன்னலங்கருவி: நாழிகையை யறிவிக்கும் யந்திரம், கன்னல் - நாழிகை; கடிகாயந்திரம் என்றும் கூறுவர். கொள்ளை கொள்ளையாய் : மிகுதி மிகுதியாய்; தூவுதல்: இறைத்தல். பாதசாரியாய், கால் நடையாய். போதலாயினன் : செல்வானாயினன். வில்உமிழ் மணிக்கழல் : ஒளி வீசுகின்ற மணிகள் பதித்த வீரக்கழல். ஒல்லெனல் : ஒலிக்குறிப்பு. சரம்: மலர்மாலை. இரைந்தெழுந்தன: ஒலித்தெழுந்தன. மகரகுண்டலம் : சுறா மீன் வடிவமாகச் செய்த காதணி. எஃகம் : வேல். வாளம். கத்தி; வடமொழி. ஈட்டி : எறிவேல். இருமருங்கு : இருபக்கம். கரும்பினும் இன்மொழி காரிகையார். கரும்பு ரசத்தினு மினிய வார்த்தையையுடைய பெண்கள்; காரிகை - அழகு; அதனை யுடையார் காரிகையார். மருமலர் : வாசனையுள்ள மலர். சுண்ணம் : வாசனைப்பொடி; கந்தப்பொடி. சாந்து : சந்தனம். பெரும்புயல்மாரி : பெரிய மேகம் பொழிகின்ற மழை. மாடநீள் மந்திர மலியப்புக்கனன். உபரிகைகள் உயர்ந்த கிருகம் விளங்கப் புகுந்தனன். அருளி : அருள் செய்து. கொங்கலர் தெரியலாய் : தேன் நிறைந்துள்ள அழகிய மாலையுடையானே! கொங்கு-வாசனையுமாம்; அல் சாரியை; அம்-அழகு; "கொங்கலர், தெரியலாய்" என்பது செய்யுள். கொற்றம் : வெற்றி. கொள்க என : பெறுக என்று; இதில் ஈறு தொகுத்தல் விகாரம். உளையர் : பக்கத்துள்ளார்; உழையர் என்பது; பரிசனங்கள். வல்லபம். வல்லமை; நுவல்கின்றான் : சொல்கின்றான்.

### பக்கம் - 23.

*பெண்கொடி : கொடிபோன்ற பெண். வலங்கொண்டு : வலமிட்டு, ப்ரதக்ஷணமாக. இலக்குமி : திருமகள். சுபகாரியம் : நற்காரியம். சம்புத்தீவு : நாவலந்தீவு, இத்தீவு நாவல் மரத்தால் இப்பெயர் பெற்றது. கண்டம் : பகுதி, பிரிவு. வகுத்து : வகைப்படுத்தி. பரத கண்டம் - பரதன் என்பவன் அரசாண்டமையின் இப்பெயர் பெற்றது; நவகண்டங்களில் ஒன்று; இந்தியாவிற்கு இப்பெயர் வழங்கும். நவகண்டங்களாவன : கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்விரேபதம், வடபரதம், தென்பரதம், மத்திமகண்டம் என்பன. போக பூமி : இன்பநுகரும்பூமி. பிரபஞ்சம் : உலகம். ஊழி : முடிவுகாலம் மன்னுயிர்கள் துயர் பல்வுங்கெட : நிலைபெற்ற உயிர்களுடைய பல துன்பங்களுங்கெட. பிற்காலம் நிகழ்வன வுற்றை : தனக்குப்பின்வரும் காலத்தில் நடக்கும் சங்கதிகளை. மாற்றலர் : சத்துருக்கள்.*

### பக்கம் - 24.

*அவதரிப்பான் : உதிப்பான். பசுயிர் : பசியஉயிர் நுகர்ந்து குடித்து. ஆழி : ஆஜ்ஞா சக்கரம். சாற்றப்படுதல் : சொல்லப்படுதல். சிரகண்டிதம் : சிரத்தைக்கண்டித்தல். உத்தரகக்கிணசேடிகள் : வடக்குத்தெற்குப் பக்கங்கள். சீயம் : சிங்கம். அறிகுறி : அறிவாய. அகம் : வீடு.*

### பக்கம் - 25.

### செய்யுள்.

I. **உரை** :—*இளமலர் - இளமைபொருந்திய புஷ்பங்கள் [அன்றலர்ந்த மலர்கள் என்றபடி], தொகுத்தைவுஇலாத - சோர்ந்து நெருங்கியிராத, சோலையும்-மரச்சோலைகளும், இளமைதாமரை - இளமைபொருந்திய தாமரைகள், புக்கு - பொருந்தி, நகாத - மலராத, பொய்கையும் - தடாகமும், மிக்கு - ஒளிமிகுந்து, இளம்பிறை - இளமையான பிறைசசந்திரன், விசும்புஇலாதஅந்தியும் - ஆகாயத்தில் உடையதாகாத அந்திப்பொழுதும், மக்களைஇலாத - குழந்தைகளையுடையதாகாத, ஓர்மனையும் - ஒருவீடும், ஒக்கும் - தம்முள் ஒத்திருக்கும்.*

**குறிப்பு** :—*சோலைக்கு மலரும், பொய்கைக்குத் தாமரையும், அந்திப் பொழுதுக்குப் பிறையும் பொலிவுண்டாகுதல்போல, மக்கள் மனைக்குப் பொலிவுண்டாக்குவ ரென்பதுகருத்து.*

II. **உரை** :—*தலைமகன் - கணவன், தனக்குத்தாள் ஆக-தனக்கு அடிமரமாகவும், நிலைமைகொள் மனைவி - உறுதியைக் கொண்ட மனைவியானவள், சாகையாக - கிளைகளாகவும், நலம் மிகுமக்கள் - நன்மை மிகுந்த மக்கள், நிமிர்ந்த பூந்துணர் ஆக - சிறந்து மலர்ந்து பொலிகின்ற பூங்கொத்துக்களாகவும், முதியர்-பெரியோர்கள், தேனகளா-தேனகளாகவும், குலம்மிகு கற்பகம் - (ஒப்பற்ற) குலமாகிய சிறப்பினையுடைய கற்பக மரமானது, குளிர்ந்து தோன்றும் - இன்புற்று விளங்கும்.*

**குறிப்பு**:—தாள் - அடிமரம், கற்பகம் - கற்பினை யகத்தேயுடையதோர் மரம் என்று இல்வாழ்க்கையைச் சிலேடை வகையாற் கூறினார். குளிர்ச்சியா வது வெப்ப மின்றித் தட்பமாயிருத்தல் இச்செய்யுள் உருவகவணி.

III. உரை :—துகள் இலா - குற்றமில்லாத, சுடர்மணி - பிரகாசிக் கின்ற இரத்தினங்கள், துளும்பும்-அசையும், பூணினுய் - ஆபரணங்களுடை யாளே! தகளிவாய - அகலில (உள்ள), கொழுஞ்சுடர் - கொழுவிய சுடரா னது, தனித்தும் - தனியாயிருந்தும், கோழ் இருள் திகளம் - கொழுத்த இருளாகிய விலங்கினை, வாயபிளந்து - வாயினைப் பிளந்து, அகம் - (தானி ருக்கும்), இடத்தை, சுடர நிறகும - பிரகாசிப்பித்துக் கொண்டிருக்கும; (அதுபோல) மகள்-நின்மகள், எல்லாத்திசைகளும - எல்லாத்திக்குக்களி லும், மலிர - விளங்க, மன்னினாள - நின்றாள்.

**குறிப்பு**:—விளக்கினொளிபோலும விளக்கத்தை யுடையாள் நின்மகள் என்பது கருத்து. இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமை. தனித்தும - பல சுடரிஞேடின்றித் தனியாயிருந்தாலு மென்றபடி. நிகளம்-வடமொழி, செல விறகுந் தடையுண்டாதலின் இருள் நிகளமாயிற்று.

IV. நாமநீர் - அச்சத்தை உண்டாக்குகிற நீராகியகடலிலே (சஞ்சரிக் கின்ற), வலம்புரிவயிற்றிடை - வலம்புரி யென்னும் சங்கத்தின் வயிற்றில் பிறந்த - உதித்த, மாமணி-பெரிய முத்தானது, நலம்புரி பவித்திரம் ஆகும்- நன்மையைச்செய்கின்ற பரிசுத்தகுண முடையதாகும; (அதுபோல),பொல ம்புரி - அழகைச் செய்கின்ற, மயில் அனாய - மயில் போலுஞ் சாயலுடை யாளே! பயந்த - நீபெற்ற, பூங்கொடி - பெண்ணும், குலம்புரிந்தவாக்கு எலாம - குலத்திற் பொருந்தியவர்க்கு எல்லாம், கோலம் ஆகும-அழகினைத் தருவதாகும்.

**குறிப்பு**:—பொலமபுரி யென்பதற்குப் பொன்னாற்செய்த எனினுமாம். இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி. பவித்திரம்-வடமொழி.

V. மாவினை மருட்டிய - (ஒத்த பிளவினையுடைய) மாவடுவை (த்த னக் குவமையாகாதபடி) அஞ்சும்படி செய்த, நோக்கி - பார்வையை யுடை யாளே! நின்மகள் - நின்புதல்வி, பூவினுள் - தாமரைப்பூவி லிருக்கின்ற, மடந்தை - திருமகளும், பொன - அழகிய, பூவை - காயாமலரின், நாள ஒளி - புதிய நீல வொளிபோலுந் திருமேனியுடைய, தேவனுக்கு - திருமா லுக்கு, அமிர்தமாம - (அநுபவிக்கத்தக்கும) அமிர்தமும் ஆகிய, தெய்வம் ஆம் என - தெய்வம் ஆவாளென்று, ஒவில - நீங்குதலில்லாத, நூல் - சாஸ் திர ஆராய்ச்சியையுடைய, புரோகிதன-நிமித்திகனாகிய புரோகிதன், உணர ஓதினான - தெரியக்கூறினான.

**குறிப்பு**:—மாவடுவையும, அதன் பிளப்பையும் பெண்கள் கண்களுக்கு உவமையாகக் கூறுதலின் இங்கு மாவினை என்றதற்கு அதன பிளப்பினைக் கூறினும்; வடுவென்றே பொருள் கூறினுமாம்; ' மாவியன்றன்ன மென் னோக்கி" என்றும், " வடிக்கணணிவை" என்றுந் திருக்கோவையாரிலுங் காண்க ;' வடு - மாம்பிஞ்சு. நோக்கியாகிய நின் மகள் என்று மகளுக்கு அடை மொழியாக்கியும் கூறுவர். பூ - ஈண்டு மடந்தை யென்னுங் குறிப

பால தாமரையை புணா ததிறறு, அனறிப "பூவெனபபடுவது பொறிவாழ பூவே' எனறும கூறியவாறறாலும தாமரையையே யுணாததிறறெனக பூவை யெனபது காயா, அதன மலருககு முதாகுபெயா, அது நீல நிறமாத லின திருமேனிககு உவமமாயிறறு, "செஙகை - யஙகதிராழியான போல லாநதன விரிநதகாயா" எனறா **திருவிளையாடற்புராணத்து** புரோகி தன - வடமொழி

வாயுவேகை-சடிபரசனமனைவி உவகை-மகிழசசி

ஒளி முகிழ முகதொசது பிரகாசததைக குவிககினற முததை யொ சது, நகை சிரிபபு

பககம 26.

புடபசயனம பூககளாறசெயத படுககை. பாயல கொணடு படுதது - துயினறு திரு மேனமை மாடடு இடததில. வரலாறு : வரன்முறை. தேறறினா தெளிவிததாா. திரு முகம கடிதம வரைநது எழுதி, ஆவனவறறையும ஆகவேணடிய காரியஙகளையும அடியிணை இரணடு பாதஙகள விருமபாறுக ஆகாயமாாககமாக

பககம-27

## தூதுவிடு சருககம்

மாசி எனபவனை பயாபதி யரசனிடம சடிபரசன றூதனுபபிய பாகத ததைக கூறுவது. மருதமழ வாசனை வீச தேனமாரி தேன மழை. அங காவினகதது அசசோலையி னுளளிடதது மலா மலிநது மல நிறை நது வகுளம மகிழ மரம தேமா திததிபபாகிய மாமரம, தேனமா மரம எனவுஙகூறுவா, அதறகுத தேனபோல இனிமையுடைய மாமரம எனறு பொருள கொளக நாகம சுரபுனனை மரம புனகு புனக மரம. குரா குரா எனனு மோாமரம குரவம, குரவு, குர எனபபெயா பெறும மரா கடமப மரம வெணகடமபு மரம, "பராரை மரா" எனபது **திருமுருகாற்றுப்படை**, பாசவம மரம அடியால நீரைககுடிபபது எனபது பொருள, இது வடமொழி மேகசவு மேமபாடு ஆனிசசம மோபபினுக கொடினுந குழையுமாமையுடைய பூசசெடி, இதனை மரமெனறு மயஙகு வா மாதவி குருககததி கொடி ஒடை இவை பூஙகொடிகள, தடபம குளிர சசி. ஒடபம ஒளி. பொயகை தடாகம மனோககியம மனதை மகிழ விததல, இது மனோஞஞம எனனும வடமொழிசசிதைவு பொருகினற மோதுகினற. திவலை நீாததுளி, சீகரம எனறும பெயா பனிநீா குளிா நத வாசனை நீா திவலைபபனிநீா இருபெயரொடடுப பணபுததொகை, திவலையாகிய பனிநீா என விரியும திரைககரம அலைகளாகிய கைகள வியல பெரிய சுருமபு வணடு அருமடண அரியமாகம பிணடி, அசோகமரம அனனோன அவன இயறறபபடட செயயபபடட தூய தூவி பேடை சிலாசமை வடிவள செயவம வீறறிருககறகு எழுந தருளியிருககறகு

பககம - 28

பொழில சோலை அஙகத புரோகிதன அஙகதனெனனும பெயரு டைய புரோகிதன, நிமித்திகன இவாநதிருநதளன எறி வீறறிருநகான,

நடந்த; அழுங்கிய : அமிழ்ந்த ; வருந்திய. பாலரோ . பாகுபாடுடையரோ. மேம்பாடு. மேன்மை. நித்தியமறவி : தினந்தோறும் மறதியையே அதிகமாக்கொண்டிருத்தல். உழந்து : அலைந்து. ஆற்றல் : வல்லமை. அஃது அட : அவ்வியானை யழித்தலால். குழை : தழை. கயந்தலை : யானைக்கன்று ; கயம் - இளமை எம்மவா மகத்துவம் எங்கள ஜாதிடாரது மகிமை. வரங்கிடத்தல் : தாம வேணடிய வரத்தைப்பெறத்தவம் செயதல் , இரசதம். வெள்ளி. கிரி . மலை. கழறினன : சொன்னான். வாளாவிருத்தல் . ஒன்றும் பேசாதிருத்தல். சினவுறக கோபியா திருப்பாயாக.

பகசும் - 33.

பூபன . அரசன , பூமிக்குத்தலைவன். குரூரவார்த்தைகள் . கொடிய வார்த்தைகள். விஞ்சை . வித்தை. உதித்தவன . பிறந்தவன. கலைமகள பொருவும . சரஸ்வதியை ஒக்கும பெருமகள தாய. வயிரதிலதம : வயிரத்துள திலதம போற சிரேஷ்டமான வயிரம். நமபெருமான : நமது கடவுள. திருவடியொழுகி : சீர பாதங்களிற பததிசெயது நடந்து.

பகசுடு - 34.

உதாசினன : லட்சியமில்லாதவன , பராமுகன. அறககடவுள் : தரும மூர்த்தியாகிய தேவன ; எணடு அருககடவுள ; தியானசசோதி : தியானஞ் செயவதிற காணப்படும தெயவவொளி.

செய்யுள்.

I. உரை —அறம-தரும சொரூபியாகிய, வேநதே-தலைவனே ! அலகு இலா - அளவிலலாத, ஞானத்து - அறிவால, உலகு எலாம - எல்லா உலகங்களையும, அகதது அடஙக - உளளே அடங்கும்படி, நுங்கி - விழுங்கி, நினனுள் - உன்னிடத்தில், ஒளித்தாயும் - ஒளித்தவனும, நீயே, ஒளித்தாயும நீயே—; உயிாககு எலாம - எல்லா வுயிர்களுக்கும, கண்ணுய - கண்போன்று, அளித்தாயும - படைத்தவனும, காத்தாயும - காப்பாற்றினவனும, நீயே - நீதான , (ஆதலின) வாழி - வாழ்ந்திருப்பாயாக.

**குறிப்பு** :—ஞானத்தால என்னு மூன்றனுருபு நுங்கி என்னும் எச்சவினையையும அவ்வெச்சம ஒளித்தாயு மென்னும வினையாலணையும பெயரையுங் கொள்ளும. அந்தஞானம என்றதற்கு அலகிலா ஞானம என்றார். திரிமூர்த்திகளுக்கும தலைமையானவா அருககடவுள என்பது அம்மதத்தார் கொளகை. வாழிய என்னும வியங்கோள வாழி எனக் கடைகுறைந்து நின்றது. " வாழியவென்பத னீற்றி னுயிர்மெய் யேகலுமுரித்தஃதேகினு மியல்பே" என்பது சூத்திரம.

II. உரை :—திருமாலே - திருமாலென்னும்பெயரை யுடையவனே ! அழல் நாறும - வெப்பத்தை வீசுகின்ற, வெங்கதிரோன - சூரியன, நாண - வெட்கங் கொள்ளும்படி, அலராது - (அச்சூரியனைப் போல உஷ்ணத்தோடு ஒளி) பரவாமல், நிழல்நாறும - குளிர்ச்சியாகிய ஒளியை வீசும், மூர்த்தியாய் நின்றுயும நீயே - வடிவுடையவனுமாய நின்றவனும நீதான் ; நின்றுயு நீயே—, நிறைபொருள—(குறைவின்றி) நிறைந்த பொருள்களையுடைய, எல்லைகண் - முத்தியுலகில், சென்றுயும் சென்றவனும் வென்றுயும - வெற்றி கொண்டவனும், நீயே - நீதான, (ஆதலின) வாழி - வாழ்ந்திருப்பாயாக.

**குறிப்பு** —எல்லை - உலகு, நிறைபொருளெல்லை யென்றமையின் முற்றியுலகாயிற்று. நிழல் - குளிர்ந்த ஒளி.

III. **உரை** —நிறைதரு கேவலத்தோய் - நிறைந்த கேவலமென்னும் ஒப்பற்ற ஞான உணர்ச்சியுடையோனே! வென்றி பெருமானே - (யாவற்றையும்) வெற்றிகொண்ட பெருமை யுடையோனே! நின் அடியார்க்கு எல்லாம் - நின்னடியவர் யாவர்க்கும், குறைதலில் இன்பம் கொடுப்பாயும் நீயே- குறைவில்லாத இன்பத்தைக் கொடுப்பவனும் நீதான், கொடுப்பாயும் நீயே—, குற்றேவல் வேண்டாய் - (யான்செய்யும்) சிறியதிருவடித் தொண்டையும் வேண்டாமல், விடுத்தாயும் - விடுத்தவனும், நீத்தாயும் - (பற்றுக்களெல்லாவற்றையும்) ஒழித்தவனும், நீயே—.

**குறிப்பு** —திருவடித்தொண்டை நோக்கி அது காரணமாக அருள் செய்தலின்றித் தனது வரம்பி லருளாலேயே அருளுகின்றமையின், 'குற்றேவல் வேண்டாய்' என்றான்.

இம்மூன்று செய்யுளும் இடைமடக்கி வந்த கந்தர்வமார்க்கம். இடைமடக்காவது ஒளித்தாய் முதலியன மீண்டு மடக்கி வந்தன காண்க.

குறிஞ்சி ஓர்பண். வணங்குதல் நாணத்தால் தலைசாய்த்தல் அல்லது குறிஞ்சியும் இறைஞ்சின என்பதற்குக் கீதங்கேட்ட மலைகளும் இளகிவணங்கின எனினுமாம், பிறிதுபொருளுங் கூறுவர் வாகாய் அழகாய். அம்பர், ஆகாயம், அம்பரம் வடமொழி தம்பித்தல் அசையாது நிற்றல். கின்னரர் ஒரு தேவவகுப்பைச் சேர்ந்தவர் போனகம் உணவு காணுமிழ்தம். இசையாகிய அமிழ்தம். பன்னகலோகம் நாகலோகம் பணமுடி படங்களோடு கூடிய தலை.

பக்கம் - 35.

வேண்டினர் வேண்டியாங்கு விரும்பினோர் விரும்பியபடி எய்தினன்: சென்றான். நமிகுலம் - நமி என்பவன் வம்சம் நிகர்ப்பீர் ஒத்திருப்பீர். தொடர்பு தொடர்ச்சி. கூறுவல் சொல்வேன். பொறி அடையாளம், இதனால் திருமகட்குப் பொறி என்றொரு பெயருண்டு, மேவுவான: பொருந்த; இதுவானவர்பாட்டு வினையெச்சம். அவன் "என்று சுட்டியது" கடவுளை. மரகதம் பச்சை. இலங்குதல் விளங்குதல். வாகுவலி: தோள்வலி யுடையோன்.

பக்கம் - 36.

ஓம்பி காத்து. இறைத்தொழில். அரசாட்சி செய்யுந் தொழில். தியானுக்கினி. தியானவொளி. பயில்: வசிக்க. வல்லிகள் கொடிகள். பொழில் மரக்கண். சோலையின் கண்ணுள்ள மரத்தில். கோழரை. வழுவழுப்பான அரை, அரை - அடிமரம் வழுவழுப்பாகிய அரையை யுடைய மரங்களைக் கோழரை யென்றும், பொருக்கான அரைகளையுடைய மரங்களைப் பொரியரை மரமென்றும் சொல்லப்படும். குஞ்சி சிகை, ஆண்மயிர். *இருகுடித்தொடர் இரண்டு குலங்களின் சம்பந்தம், வம்சபரம்பரை. கேசரன். வித்தியதரன், கே - ஆகாயம், சரன் - சஞ்சரிப்பவன் நின்னிகரார். நின்னை யொப்பவர்.

பக்கம் - 37.

சூழ்ச்சி : ஆராய்ச்சி என்னென்று யாதென்று. அறிவுகொளுத்தல் : அறிவுபுகட்டல், தரிக்கச்செய்து தங்கச்செய்து.

பக்கம் - 38.

## சீயவதைச் சருக்கம்.

திவிட்டனென்பவன் பகைவர் தன்னிடத்தனுப்பிய மாயச சிங்கத்தை வதைத்த சங்கதியைக் குறிக்கும் பாகம். சீயம்-சிம்ஹம் என்னும் வடசொல் விகாரம். கைச்சமிக்ஞை : கைக்குறிப்பு, ஸம்ஜ்ஞா என்னும் வடமொழிச் சிதைவு. பொலிவினுல் : விளக்கத்தினுல். அநுமித்தல் . ஊகித்தறிதல்; அநுமானித்தல், அநுமானமாவது புகையைக் கண்டவிடத்து நெருப்புண்டென்று ஊகித்தல் , இஃது அளவைப் பிரமாணங்களிலொன்று. இரைத்துக · சப்தித்து மேலவிழ. வண்சிறை பெரிய இறகு , வளப்பம் பொருந்திய சிறகுகள். வளப்பம் - அழகு. நித்திலம் . முத்து. வெள்ளி வேய்ந்த பத்திகள் : வெள்ளியால் வேய்ப்பட்ட வரிசைகள் , வேய்தல் - மேலமூடுதல். வேதிகை மேடை. பிண்டி . அசோகமரம். நிழல் : ஒளி. வீற்றுவைகுக : மிக்கசிறப்பொடு தங்குக , புகன்று . சொல்லி ; துதித்துமரம. அணங்கு அனையார் தெய்வப் பெண்களையொத்த பெண்கள், அணங்கு-திருமகளுமாம். அஷ்டமங்கலம் எட்டுமங்கலப் பொருள்கள் , அவையாவன · சாமரம், தீபம், நிறைகுடம், இணைக்கயல், கண்ணுடி, அங்குசம், கொடி, முரசம் என்பன. சோடசோபசாரம் பதினுறுவகை யுபசாரம், அவை:—தவிசளித்தல், கைகழுவ நீர்தரல், காலகழுவ நீர்தரல், முக்குடி நீர்தரல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூல்தரல். தேய்வை பூசல், மலர் சாத்தல், மஞ்சளரிசி தூவல், நறும் புகைகாட்டல், விளக்கிடல், கற்பூரமேற்றல், அமுதமேந்தல், அடைக்காய்தரல், மந்திர மலரான அருச்சித்தல் என்பன ; இவற்றை முறையே ஆசனம், ஆசமனம், பாத்தியம், ஆசமனீயம் ஸ்நானம், வஸ்திரம், எஜ்ஞோபவீதம், கந்தம், புஷ்பம், சோபஞக்ஷதை, தூபம், தீபம், கற்பூரதீபம், அன்னம், தாம்பூலம், மந்திரபுஷ்பம் என்பர் வடநூலார். ஷட+தச-சோடச என்பது வடமொழிச்சந்தி. இளங்கருங்கைமமா . இளமை பொருந்திய கரிய துதிக்கையையுடைய யானை, தளம் தருமமொய்வெரிந் பருமை அமைந்த வலியுள்ள முதுகு.

பக்கம் - 39.

இறை : அரசன். பொன்னிறப்பொறி : பொன்னின் நிறத்தாலமைந்த முத்திரை , இலச்சினையெனவும் படும் திருமுகம் . ஓலை. விம்மிதம் . பிரமித்தல்; நினையாதிருக்கையில் வருவதோரானந்தம் ; விஸ்மிதம் என்னும் வடசொறசிதைவு. மோனி : மௌனி. பேசாதிருத்தல். மெய்ந்நிலை : உண்மைநிலை. பொறகுவால் : பொன்குவியல் ; சுவாணத்திரள். அருங்கலம் : விலையுயர்ந்த ஆபரணம். புண்ணியம் புணர்த்தவா : புண்ணியங்கூடியவிதம்.

பக்கம் - 39.

இறப்ப . மிக. உசாவ . வினவ , விசாரிக்க அவதி . காலம்.

### பக்கம் - 40.

வதுவை : கலயாணம. நிலமடநதை : பூதேவி. ஊடி : கோபித்து அறறம : சமயம. உட்பகை : காமம முதலியன ; அவை-காமம், கோபம், லோபம, மோகம, மதம், மாறசரியம எனபன , இவறறை யறுவகையுட் பகையென்பா.

### பக்கம்-41.

புனசொல நிமித்தம் ' அறபச் சொல்லாகிய குறி நிமித்தம் ; பின் நிகழ் வதை முனனறிவிப்பது. சசசரை யரசன : போாத தொழிலுள்ள அரசன், ஆலவட்டம ' விசிறி. துளங்குதல அசைதல பிரசணட மாருதம : மிகு தியுங் கொடுமையான காறறு. தானவா : அசுரர். தானை : சேனை. அடு தல ' கொலலுதல. பொசசல பொய எறறுக்கு எதறகு. பற்றுக் கோடு : ஆதாரம.

### பக்கம் 42.

வாய்த்துழி : நேரிட்ட விடத்து. நச்சுமரம ' விஷமரம். களைதல் : பறிததல. காழபபு : வைரம். குடாரம கோடரி இயலுதல . முடிதல். சேறிய ஆறு சேரா நத விதம இழுககு குறறம, (Drawback)

### செய்யுள்.

**உரை**.—நட்பு பிரித்தல - (சனது) சிநேகிதரைப பகையாக்கிக் கொள் ளுதலும, பகை நட்டல - பகைவரோடு சிநேகம செய்தலும், ஒறறு இகழ தல - வேவு காரரை அவமதிக்தலும, பக்கததாாபாரையும ஐயுறுதல - தன அருகேயிருககுநா யாவா மாட்டினும சநதேகபபடுதலும, தககாா நெடு மொழி கோறல - மேசகவுடைய பெரியோரது உறுதி மொழிகளைக் கடநது நடத்தலும, குணம பிறிது ஆதல - (முனனிருநத) தனது தன்மை வேறு படுதலும, (ஆகிய இவை யனைததும) கெடுவது காட்டுங்குறி-(ஓரரசன) இனிக்கெட்டழியப் போகு மாறறினை முனனரே காட்டுகினற உறபாதங்க ளாம.

**குறிப்பு**:—நட்பு. பகை இவவிரண்டும் பணபாகு பெயாகள. ஒறறு - முதனிலைத தொழிலாகு பெயா. குறி - அறிகுறி.

### பக்கம்-43.

திறை : வரி வம்மின ' வாருஙகள அநுமதி செய்து . கடடளையிட்டு. திருமுகம : ஓலை , இது தகுதி வழக்கு பரித்த ' தாங்கிய நாட்டியம் ; கூததா விசதியாதரா . ஓா வகை சேவ ஜாதியார் சேறல ' செலலுதல். பீதாம்பரம : பொனபடடாடை ;

### பக்கம்-44.

முத்தம : முத்து ; மருப்பு : தநதம். நூதனமான : புதிதான. புகை யும் : கோபிக்கும. அன்றேனை பணி . அவன கட்டளையிட்ட வேலைகள். முற்சனனம் : முறபிறப்பு. .

பக்கம்-45.

புதல்வர் : பிள்ளைகள். கோசு : தநதம் சாதிப்பவளங்கள் : சிறநத பவளஙகள். அனநதரா : பிறகு, அநதரவழி : ஆகாசவழி. கவழிகை : திரைச்சீலை.

பக்கம்-46.

மூண்டது : உண்டாயிற்று முடித்தலையிருநது : கிரீடத்தின நுனியி னின்று, அரதனசதனம: இதனினமுள்ள இடம புயம் : தோள. வதனம் : முகம; உறுக்குதல : அதட்டுதல; ஆழி : சககிரம் வறிதாக : பய னிலலாமல.

பக்கம்-47.

பாணேபசாரம் பாணததைப் பிரயோகித்தலாகிய உபசாரம். 'விண் ணுலகையும அரசாளக கொடுபபேன' என்றது மங்கல வழக்கு பாருடம : நிறைபபொருள ; 'இது ப்ராப்ருதம' எனனும் வடமொழிச் சிதைவு, கை யுறை : காணிககை இருகார்க்கு செலுததாதவர்களுக்கு பார்த்திவன் : அரசன. இயமபுமின சொல்லுஙகள். நாணி : வெட்க மடைநது.

பக்கம்-48.

வர்த்தமானம் வரலாறு சுவாலை : கொழுநது. உளை : பிடரிமயிர். உகிர் : நகம. ஒளி வீசுகின்ற எயிறு : பல. தெரிமா : சிஙகம். பிரசித்த மான விலங்காதலின இபபோ பெற்றது போலும். அடைகற்கள் : மலை யைச் சாாநதுள்ள கலலுகள். புடைபதா : புடைக்கப்பட்ட பதர். உரும் ஏறுண்ட : இடி மேல்வீழப்பெறற. கட்செவி : பாம்பு கண்களையே கா தாக உடையது எனனும காரணககுறி ; இது சக்ஷுச்ரவா : எனனும் வட மொழியின மொழிபெயாபபு. உட்கி : பயநது.

பக்கம் - 49.

பவனிவரல : ஊர்கோலம வருதல நுநதை : நும் தகப்பன் விண்டு-அகல. பிரிந்து - நீங்க. மறிதத ; தடுகத வயபபுலி ; சிஙகம். இயக்குதும - செலுததுவோம. நலிஇ : வருத்தி ; பொலிமதி : விளங்கு இதிலமதி - முன்னிலை யசை ; "மியாயிக மோமதி" என்பது நன்னூல். பொருமுபு எழ : பூரிகதுததோளற ; நகாயுதம் : நகத்தையே ஆயுதமாக வுடையது எனறு சிங்கததிறகுக காரணக்குறி, செயிர்பு. கோபித்து. முழை-குகை.

பக்கம் - 50.

வித்தகா : இங்கு, தூதர். வீய கெட. முழைஞ்சு : மலைக்குகை. உறழும : ஒக்கும. வலிததுபபோக : வலியச்செலல. கவான் : தொடை. இது 'கவீநீ' எனனும் வடசொற்சிதை வெனபர். கம்பலம் : இரத்தின கம் பளம். குவால் : கூட்டம. உவா - அரசயானை. எருக்கி : பதிநது. பஞ் சாநநம். பரநத முகமுடையது எனறு சிங்கததிற்குக் காரணக்குறி. சாரல் : மலைச்சாரல். அணியன : கிட்டியவன. வயப்போத்து : வலிய ஆணசிங்கம. துறுகல : நெருங்கிய கல. பிதிர் : பொடி. அத்தகடகம் :

அஸ்தகடகம் எனும் கையில் அணியும் வளை. குஞ்சி - ஆண் தலைமயிர். தொடர் கொண்டு திரித்து . கயிற்றின்ற சடடு , சேயதாய மேய தூரத்திலுள்ள தாய்ப் பொருந்தின. காளி கொடியது என்பது பொருள்; சிங்கம். காயம பணிக்க-உடல்நடுங்க. ஓட்டெடுத்தல் - ஓடிப்போதல் இளையகாளை : இங்கு, திவிட்டன ; காளை - உவமையாகு பெயர்.

பக்கம் 51.

1. **உரை** —அங்கு-அப்பொழுது, கழல் - (அந்தத் திவிட்டனுடைய) வீரக்கழல்கள், ஆர்த்தில - சப்திக்கவில்லை ; காலகளும்—, நிலம் உறு- பூமியிற் படவில்லை ; முடங்க - மடங்கவுமில்லை , அழலும் - சொலிக்கின்ற, செம்சுடர் கடகம்-சிவந்த ஒளியையுடைய கடகமெனனும் அணியை (அணிந்த), கை அவை-கைகள், புடை-பெயரா—பக்கங்களில், அசையவில்லை; குழலும் குஞ்சியும்-நுனிசுரிந்த மயிர்முடியும், மாலையும்-பூமாலையும், கொளுவிய தொடரும் - (அக்குஞ்சியைக்) கட்டியகயிறும், எழுந்து - மேலெழுந்து, எழிலும் - அழகிய, தோளிலும்—, எருத்திலும் - பிடரியிலும், கிடந்தில - விழுந்து படிந்தனவில்லை.

**குறிப்பு** —அவை - பகுதிப்பொருள் விகுதி. உம் சாரியை.

2. மரங்கள்—, வேரொடும் வீழ்ந்தென - வேரோடு கீழே விழுந்தன வாக, வளிதொடர்ந்து எழுந்த - காற்றுகளுள் வரிசையாய் மேலே எழுந்தன ; நிரந்த - கூட்டமான, மான்களும் பறவையும்—, நிலம் கொண்டு - தரையில் நின்றுகொண்டு, பதைத்த - துடித்தன , அரம்கொள் - அரம்என னும் ஆயுதத்தை யொத்த [மிகவும் கூர்மையான], வெம்பரல் - கொடிய பருக்கைக் கற்களையுடைய, அணிவரை - அழகிய மலையின், கொடு முடி அவைதாம் - சிகரங்கள்தாம், உரம்கொள் - வல்லமையுடைய, தோள்வன் விரல் நுங்கிஉற - தோளையுடைய திவிட்டனுடைய விரல்பட்டுச் செலலுத லால், உடைந்து ஒழிந்த - உடைபட்டு ஒழிந்தன.

**குறிப்பு** .—'வீழ்ந்தென' என்பது 'செய்தென' எனும் வாய்பாட்டு வினை யெச்சம்.

வனதேவதை . காட்டிலுள்ள தெய்வம் கண்டீரம் : இது கண்டீர வம் என்றதன் திரிபு ; கழுத்தில் ஓசையையுடையது எனச் சிங்கத்திற்குக் காரணக்குறி. அணடிய : நெருங்கிய. கேசரி . பிடரிமயிரை யுடையது எனச்சிங்கத்திற்குக் காரணக்குறி , எனவே, ஆண்சிங்கம். ஆரவாரம் : பேரிரைச்சல். நிலகம்பம் பூமிநடுங்கல். அரியரசு சிறந்தசிங்கம். கொடும்புலி : சிங்கம். மாபுலி என்பதுமிது. கெழும நிறைந்த மடங்கல் : ஆண்சிங்கம். பிலம் குகை. உதிரம இரத்தம்

பக்கம் - 52.

விசும்பினர் : ஆகாயத்திலுள்ளவா உடல் பனித்தனர் : தேகம் நடுங் கப்பெற்றனா அறுகு : சிங்கம் ; பேழ்கள் : பிளப்புக்கள் ; அடிகாள் : பெரியோய் , ஆளி : சிங்கம். மான் : இறக்க சேறும் : செல்வோம்; றும்-தன்மைப்பன்மை விகுதி.

**உரை** —1. கற்றவர் - படித்தவர்களும், கடவுள் தானம் சேர்ந்தவர் - கோயில் முதலிய இடத்தை அடைந்தவர்களும், களைகண் இலார் - திக்கற்ற வர்களும், அற்றவா - பொருளற்றவர்களும், அந்தணர் - பிராமணர்களும்,

அன்றியும் - கீழ்க்கூறியவர்களல்லாமலும், அனைய நீரார்க்கு - அத்தன்மையுடையவர்களுமாகிய இவர்களுக்கு, உற்ற ஓர் இடுக்கண் வந்தால் - பெரியதொரு துன்பம் வந்தால் உதவுதற்கு - (அதனைப் போக்கி) உதவுவதற்கு, உரித்து அன்று ஆயின் - உரியது அன்றாகும் ஆயின், பெற்ற இ உடம்பு தன்னால்—, பெறும்பயன் இல்லை.

உரை.—மன்னுயிர் வருந்தக் கண்டும்—, வாழ்வதே வலிக்கும் ஆயின் - (ஒருவன் அதைப்போக்காமல் தான்) வாழ்வதையே வலிமையாகக் கொள்வானாயின், அன்னவன் ஆண்மை ஆவது—, அலிபெற்ற அழகுபோலாம்—; 'யான்—, என்னை கொடுத்தும் - என் உயிரைக் கொடுத்தாயினும், வையத்து இடுக்கண்நோய் கெடுப்பன் - உலகத்தவரது துன்பமாகிய வியாதியைப் போக்குவேன்', என்னும்—, நினைவே—, போலும் - ஒக்கும், நீரா - தன்மையுடையவர், நிலமிசை—, நிலவி நின்றார் - (கீர்த்தியினால்) விளங்கி நின்றார்கள்.

பக்கம் - 53.

மகிழ் சிறந்தனர் சந்தோஷம் மிகப்பெற்றனர். அச்சம் · பயம். இருகப்புலலி · கெட்டியாய்த்தழுவி. வனத்துகள் காட்டுப்புழுதி. போற்றி வாழ்க, இது வியங்கோள். வட்பலி · புலியினும் வன்மையுடையது எனச்சிங்கத்திற்குக் காரணக்குறி.

பக்கம்-54.

## கலியாணச் சருக்கம்.

### திவிட்டனது கலியாணத்தைக் கூறுவது.

உரை.—செங்கண்மால் - சிவந்த கண்களையுடைய திருமாலின் அம்சமான திவிட்டன், சிங்கம் வென்று—, செழுமலர் திலதம் கண்ணி - அழகிய மலர்களாலாகிய சிறந்த முடிமாலையுடைய, திங்கள்மா வண்ணனோடும் - சந்திரன்போன்ற சிறந்த நிறமுடைய விசயனுடனே, திருநகர் பெயர்ந்தபின்னை - சிறந்த (தனது) பட்டணத்திற்குத் திரும்பிய பின்னர், அம் கண் மாற்கு உரிய - அழகிய கண்களையுடைய அத்திவிட்டனுக்குத் தக்க, நங்கை - மகளும், அரும்பெறல் அவட்கு - பெறுதற்கு அருமையானவளுமான அசுயம்பிரபை என்பாளுக்கு, தாதை - தந்தையாகிய, வெம் கண்மால் களிறு அன்னான் தன் - கொடிய கண்களையுடைய பெரிய மதயானையை யொத்த சடியரசனது, திறம் - செய்தியை, இனி விளம்பல் உற்றேன்—.

தமராயினார் : பந்துக்கள். வாதகமானம் · ஒரு வித்தியாதர நகரம். சக்கிரி : அரசன் வச்சிர தாடன் வச்சிராயுதம் போன்ற அடித்தலையுடையான் புரவலன், தராபதி. அரசன் வேயிறோ : ஒற்றர். பண் உறுத்தல் · அலங்கரித்தல், இளவல் · தம்பி, இதில், அல் - பெயர்விகுதி

பக்கம். 55.

அரிபுரம் ஒரு வித்தியாதர நகரம். பொருநன் : அரசன், போர்செய்பவன், வீரன். வியாக்கிரரதன் . புலியை வாகனமாக வுடையவன். கன்னிமாடம் : கலியாண மாகாப்பெண்கள் வசிக்குமிடம். சேடியர் : தோழியர். பூஷணம் : அணி மிளிரும் · விளங்கும். லகு : லேசு.

பக்கம் - 56.

மஞ்சிகை : பெட்டி. குப்பி : ஒருவகைப்பாத்திரம். எஞ்சல் இல் : குறைவில்லாத. கொம்பு : ஊதுகொம்பு. காகளம் : ஒருவகைவாத்தியம். 'பாராட்டுத்தாய்' என்பது முதல் 'செவிலித்தாய்' என்பது ஈறாக : கீழ்க் கூறிய ஐவகைத்தாயர். ஊர்தி : வாகனம். இரசிதகிரி : வெள்ளிமலை. இரணியவரை : பொன்மலை. காவுகள் : சோலைகள். காண்மதி : பார்ப்பாய்; இதில் மதி : முன்னிலையசை. ஆகாசஅயனம் : ஆகாசவழி. அங்கணர் : அவ்விடத்திருப்பவர். மங்குல் : மேகம். வங்கமலை : வெள்ளிமலை.

பக்கம் 57.

**உரை :—1.** இசைக்கும் - சப்திக்கின்ற, அஞ்சிறைப் பறவைகள் என - அழகிய இறகுகளையுடைய பறவைகள் போல, பெயர் - திரிகிற, இனம் வண்டுபடை சூழ - கூட்டமாகிய வண்டுகள் பக்கத்திற் சூழ, நுரைகள் என்னும் அகுழம்பு - நுரைகளாகிய அந்தச் சந்தனக்குழம்பை, கொண்டு - (தான்) கொண்டு எதிர்ந்து—, எழ நுடங்கிய - (அலைகள்) மேலே எழுந்து மடங்கும் தன்மையால், (கங்காநதியானது), திரைகரங்களின் - அலைகளாகிய கைகளால், செழுமலை - செழுமையான மலைகளிலிருந்து கொண்டு வருகிற, சந்தனம் திரள்களை - சந்தனக்கட்டைகளின் கூட்டங்களை, கரைமேல் வைத்து—, அரைக்கும் - அரைக்கிறதுபோலும். மற்றும் - பின்னும், இது - இந்த ஆறானது, குணகடல் திரையொடும் பொருது அலலது - கீழ்க்கடலின் அலைகளோடு தாக்கி அல்லாமல், அவியாது - அடங்காது.

சவ்வியம் : இடதுபக்கம் பெயர்வது செல்லுவது. கலங்கள் : ஆபரணங்கள். அறிமின் : அறியுங்கள். பொன்உறழ் : பொன்னையொப்ப. மின் பிறழும் : ஒளிவீசும். கரதலம் : கையினிடம். நடம் மேற்குதிக்கிற செல்லும் ஆறு விளையாட்டு இழைப்பது - விளையாட்டைச் செய்வது.

**உரை :—2.** உயரும் சந்தனம் பொழில் - உயர்ந்துள்ள சந்தனச் சோலையை, அலைத்து—, ஒளிர் மணிகலங்களை - விளங்குகின்ற இரத்தினாபரணங்களை, உமிழ்ந்திட்டு வெளிப்படுத்தி, பெயரும் - பெயர்ந்து செல்லுகிற, தெள்திரை பிறங்கத்துள் - தெளிவான அலைகளாகிய மலையினிடத்து, பிணங்கிய - நெருங்கியுள்ள, பெருவரை அகில் தேக்கி - பெரிய மலையிலுள்ள அகிற்கட்டைகளைக் கொண்டுவந்து நிறைத்து, வயிரம் வேதிகம் மலைவது - (கரைகளிலுள்ள) வச்சிரமிழைத்த மேடைகளில் மோதுவது அன்றியும் அச்சிந்து நதியானது) கோபுரம் வாயதலின் - (சிவாலயத்துக்) கோபுர வாயிலின், படிதீண்டி - படியைச்சேர்ந்து, அயிரைவார் கரைகுடகடல் - மீன்களையும் நீண்டகரையையுமுடைய மேல்கடலின், திரையொடும்பொருது அலது அவியாது - அலைகளோடும் மோதியல்லாமல் அடங்காது.

'செல்வம்' என்றது இங்குச் சுயம்பிரபையை. முகிற்படலம் - மேகக்கூட்டம். கருவரை - கரியமலை.

பக்கம் - 58.

கனன்று : கோபித்து. அளகம் : கூந்தல். அரிவை : பெண். இடந்து : கீண்டு. பகடு : ஆண்யானை. பிடிக்கணம் : பெண்யானைகளின் கூட்டம். இலங்குறும் : விளங்கும். அலங்கிருதி : அலங்காரம். திவளுதல் : அசைந்து விளங்குதல். விற்பனமயிலே : அறிவுள்ள மயில்போன்றபெண்ணே ; இ

து இங்கே சுயம்பிரபையைக்குறித்தது. உழையவள் . சமீபத்திலிருப்ப வள். பந்தி : குதிரைச்சாலை. கொட்டிலை . கொட்டகை.

பக்கம் - 59.

அனவரதம் . எப்பொழுதும். நும்பாடி . உமமுடையஇடம். வரையாது- அளவிடாமல்.

பக்கம்-60.

எய்தினமை அடைந்தமை. தந்தி தந்தத்தையுடையது எனயானைக் குக்காரணக்குறி கந்து யானைகட்டுந்தறி. சால்நிகளம் கால்சங்கிலி. வரிபுரிபொருந்திய நீட்சியும் முறுக்கும்பொருந்தின. கச்சைகளவீக்கி : யானைகக்ழுத்தில் கயிறுகளைக்கட்டி. கிடுகு : தேரின் ஓர் உறுப்பு. புனகமபொருந்தி . கணைஞுடிகட்டி. பரவைத்தட்டு . அலைமானததட்டு. புடைமிடைதல. பக்கங்களில் நெருங்குதல. மணிக்கோவை மணிமாலை. கவரிஇணைந்து. மரைமயிரினுல் செய்யப்பட்ட ஒரு தலைபாபரணத்தைப பொருந்தி. நாற்றுக தொங்கவிடுக இதுபிறவினை. பூரணகும்பம : நீர் நிறைந்துள்ளகுடம். இருநிதி பெருஞ்செல்வம். கணைநுகம - குதிரை. மட்டு - வாசனை, தேன். பூங்கா - பூஞ்சோலை. பவனகவனம் . வாயுவேகம்.

பக்கம் - 61.

செய்யுளுரை

திங்களை இரண்டு கூறுசெய்து - சந்திரனை இரண்டு பிளப்பாக்கி, முன செறித்த போல - முன் அமைத்தன போல, மங்கள வடிவின வந்த - மங்கள கரமான வடிவத்துடன் வந்த, வல்ன உயர் வயிர கோடு - வல்லமை மிகுந்த உறுதியான தந்தங்களையும், செமகளி வித்தத போலும் - சிவந்த சந்தனக் குழம்பினுல் அமைத்தன போன்ற, செம்பொறி - சிவந்த முகப்புள்ளிகளையும், சிறு கண் - சிறிய கண்களையு முடையதும், வெம களி - கொடிய களிப்பையுடைய, வியாழம வல்ல விறலது - புலியுடைத் தான வலிமையைத் தான உடையதுமாகிய, வேழம் வருக - பட்ட யானை யானையானது இங்குவரக்கடவது, எனுன்-என்று கட்டளையிட்டான்.

தவளம - வெண்மை, கஞ்சக்கருவி - வெணகல வாத்தியம், நரம்புக்கரு வி-வீணைமுதலியன. மிடற்றுக் கருவி யென்றது பாடுந் தொண்டையை.

பக்கம் - 62.

பற்றுத ஈடாகாத. வரமுண ' வராமுன.

பக்கம் - 63.

வினையம . வணக்கம. ஐக்கியம : ஒற்றுமை. மலையரசன் : வித்தியா தரராஜன்.

செய்யுளுரை.

பொலம கலம புலம்ப - பொன்னுபரணங்கள சப்திக்கவும், ஆயம் புடை நின்று - தோழியார்களின கூட்டம் பக்கத்திற் சூழ்ந்து நின்று, போற்று கூவ - வாழ்த்துக்களைச் சொல்லவும், அலங்கலும குழலும் தாழ - மாலை களும் கூந்தலும் தொங்கவும், அணிஞிமிறு அரவம் செய்ய-(அவற்றில்) மொ

ய்க்கின்ற வண்டுகள் சப்தம் செய்யவும், இலங்கல் - விளங்குகின்ற, அம்-அழகிய, ககனம் மாடத்து - ஆகாயமளாவிய உப்பரிகையின், எழுநிலை ஏறல் உற்றுள் - ஏழாவது நிலைமையு அடைந்தவள், விலங்கலின் குவடு சேரும் - மலையினது சிகரத்தை அடைகின்ற, மெல் இயல் - மெல்லிய தன்மையையுடைய, தோகை போல்வாள் மயிலை யொத்தவளாயினாள்.

காப்பு : கதவு சுட்டி . குறித்து. மீட்சல் ஆற்றுமை : திருப்பக்கூடாமல்.

பக்கம். 64.

செய்யுளுரை.

தூமரு - பரிசுத்தம்பொருந்தின, நீலம் எனனுமமணி - நீலரத்தினம் துன்னாநதுஅனைய - திரண்டாறபோன்ற, குஞ்சி - மயிர்முடியுடைய, காமரு காளை - அழகிய காளைபோலப்பவனுகிய திவிட்டன், தாமரை அனைய—, கண்ணும் - கணகளையும், தட கையும் - விசாலமான கைகளையும், பவளவாயும் - பவளம்போன்றவாயையும், பூமருகண்ணி - அழகுபொருந்திய மாலையாகத் தொடுக்கத்தக்க, புதுப்பூவைமலர் - அப்பொழுதுமலர்ந்த காயாம்பூ போன்ற, ஒளியும் - (தன்னுடைய) தேக காந்தியையும், காட்டி-காண்பித்து, கனனிகண்களை - அப்பெண்ணினது கணகளை, சிறைகொண்டிட்டான் தனவசமாக்கினான்.

பணிகள்திருத்துதல் - ஆபரணங்களை ஒழுங்குபடுத்தல். குறங்கு - தொடை, அநதாபபுரம் - அந்தப்புரம், காண்டற்கு அமைந்த - தரிசிப்பதற்குத் தக்க, காட்புமங்கலங்கள் · இரக்ஷைக்குத்தக்க மங்கலப்பொருள்கள்.

பக்கம் - 65.

தாபதமகளிர் . முனிவாமகளிர் கைத்தாயா-செவிலித்தாயார். இதன்வி சேடங் கீழ்கூறினும். சிவிகை : பல்லக்கு. பூவணை : புஷ்பசயனம் இரட்டல்: வீசுதல். உழைக்கலமகளிர் : பரிசாரகப்பெண்கள்.

பக்கம் - 66.

குறுமுறுவல் - புன்சிரிப்பு திருமொழிப்பணணிகாரம் - அழகியவார்த்தையாகிய சிற்றுண்டிவகை, துகிலிகைத்தொழில் - சித்திரமெழுதும்வேலை, சமைத்தல் - அமைத்தல், பண்ணல்.

பக்கம் - 67.

வழிப்படல் : பூசித்தல் இளையநம்பி . இங்குத்திவிட்டன். அடிகள் : சுவாமி. அறறம் : சமயம்.

செய்யுளுரை.

வெய்யோன் - சூரியன், விண்இயல் - ஆகாயத்திற் பொருந்தின, உருவம் வீதிமேல் நின்று - அழகிய மேலிடத்தினின்றும், இழிந்து - இறங்கி, தண் இயல் - விசாலம் பொருந்திய, விலங்கல் நெற்றி - (அஸ்த) மலையின் சிகரத்தை, கதிர்என்னும் கையின் ஊன்றி - கிரணங்களாகிய கை

களால் ஊன்றிக்கொண்டு, மண் இயல் - பூமியிற் பொருந்திய, மரத்தின் சாகை நுதிபிடித்து - மரங்களின்கிளை நுனிகளைப் பிடித்துக்கொண்டு, அவையுமவிட்டு - (பிறகு) அவற்றையும் விட்டுவிட்டு, பண் இயல - (தனனுடைய) இயற்கையான குணமானது, பிறிது ஒன்றாகி - மாறுபட்டு, பையவே மறைந்து போனான் - மெல்லமறைந்து சென்றான்.

பக்கம் - 68.

மதனாஸ்த்திரம. மனமகுபாணம்; மதன + அஸ்த்திரம எனபபிரிக்க. இது வடமொழித்தீர்க்க சந்தி. வசமஅழிந்து - சுவாதீனம கெட்டு. சந்திரகிரணம : சந்திரன ஒளி (நிலா.) சாமம : ஏழரைநாழிகை கொண்டகாலம இதுயாமம என்றிருத்தலு முண்டு. பொருகாமம : மிகக ஆசையெனபது கருத்து. ஒருவாது தணியாமல், ருசித வார்த்தைகள் சந்தோஷம் உறுவிக்கும் வார்த்தைகள. நியமம . செயகடன. நைமித்திகம : விசேடச் சடங்கு. ஒருத்தல : ஆண்யானை.

பக்கம் - 69.

இளையபெருமாள எனபது திவிட்டனை, அகணிகாரியம . விவாகத்திற செய்யும ஓமஙகள.

பக்கம 70.

கோட்டம கோடு, வெள்ளையிடுதல அரிசி இடுதல குணக்கு - கிழதிசை. வாலவளையினறு - சுத்தனமான மண்டலம அமைதது. பரிதிசமிதைகள் பரிதிகளும மற்றுமவேண்டும சமிதைகளும் ; பரிதிகள், கிழதிசை யொழிந்ததிசைகளில வைககபபடும சமிதைகள் சமிதை பலாசங்கொம்பு, அரசங்கொம்பு மாகலாம். கிரியை . சடஙகுகள். எரிவலம் வருதல : அக்கினியைச் சுற்றிவருதல். கன்னிதமர் : பெண்ணின உறவின முறையார். தியாகம : வரமபில்லாத கொடை. பஞ்சட்டி . கல்லியாணப்பெண்.

செய்யுளுரை.

உலம பாராட்டும தோளான—திரண்டுள்ள கறறூணின தன்மையைத் (தன்னிடத்திற) கொண்ட தோள்களை யுடைய திவிட்டனானவன, ஒள் பூ குழலாளை : ஒளிபொருந்திய மலர்களைத் தரித்த கூநதலையுடைய சுயம பிரபையை, நலம் பாராட்டி — இனபத்தாற கொண்டாடி, நாகுஇளமுல்லை நகுவிக்கும-மிகவும இளைமயான முல்லைக் கொடியை மலரச் செய்கின்ற, வலம் பாராட்டி வந்தது—(பூமியைப) பிரதக்ஷிணை யாகச்சுற்றி வருவதாகிய, ஓர்மாரிபுயல் ஒத்தான்—ஒரு கார்காலமேகத்தை யொத்தான்: குலம் பாராட்டும் கொம்பும—பிறந்த குலமும், புக்ககுலமுமாகிய இரண்டுகுலமும் கொண்டாடப் பெறற கொடிபோன்ற அப்பெண்ணும் , ஓர் முல்லைக் கொடி யொத்தாள்—ஒருமுல்லைக் கொடியைப் போன்றாள்.

வசன சூளாமணிப் பகுதியுரை முற்றுப் பெற்றது.

சுபமஸ்து.



# முகவுரை.

இக்கதைச்சுருக்கம், பழைய தமிழ்க்காப்பியமைந்தனுள் மூன்றாவதும், பௌத்தமத பிக்ஷுணியாகிய மணிமேகலை யென்பவளின் சரித்திரத்தை விரித்துக்கூறுவதுமாகிய மணிமேகலையென்னும் நூலிற் கூறப்பட்டுள்ள சரித்திரத்தின் சுருக்கமாதலால், மணிமேகலைக்கதைச்சுருக்கமென்று பெயர்பெற்றது.

[ஐந்துகாப்பியங்களாவன: சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதியென்பன.]

இதனால், பௌத்தமத ஸம்பிரதாயங்களும், பல நூற்றாண்டுகளுக்குமுன் இத்தமிழ்த்தேயம் பலவகைக் கல்வி, பாஷாபிமானம், சிற்பம், ஸங்கீதம், வாணிகம், அந்நியதேசயாத்திரை, சமயகொள்கை, தேவாலயபரிபாலனம், தெய்வவழிபாடு, தவவொழுக்கம், கற்பு, பலவகையான நீதிகள், அரசாட்சி, துஷ்டநிக்கிரகம், சிஷ்டபரிபாலனம், இராசவிசுவாஸம், நாட்டுவளம், ஆற்றுவளம், நகரவளம் முதலியவற்றில் இன்ன இன்னவண்ணமாகச் சிறப்புற்றிருந்ததென்பதும் நன்கு அறியலாகும்.

மாணாக்கர்களுடைய ஸௌகரியங்களைக்கருதி, அரும்பதவுரையும் அபிதானவிளக்கமும் நூதனமாக எழுதி இக்கதைச்சுருக்கத்தின் பின்னர்ச் சேர்க்கப்பெற்றுள்ளன.

அன்புவைத்து இக்கதைச்சுருக்கத்தை 1907 - ஆம் ௵த்து எப் - ஏ பரீக்ஷைக்குப் பாடமாக நியமித்த தமிழ்ப்பாஷாபிமானிகளாகிய சென்னை யூனிவர்ஸிடியார்பால் மிக்க நன்றியறிவுள்ளவனாக இருக்கிறேன்.

இங்ஙனம்

சென்னை,
5—2—06.

வே. சாமிநாதையன்.

# இப்புத்தகத்திலடங்கியவை.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம. |
|---|---|---|---|
| ௩. | ௧௦. | என். | என்று. |
| ௧௨. | ௩. | செத்தோரை. | சாவோரை. |
| ௬௨. | ௧௦. | கொடுத்த. | கேட்ட. |

பரமபதி துணை.

# மணிமேகலைக்கதைச்சுருக்கம்.

வெண்பா.

"படிக நிறமும் பவளம்போல் வாயுங்
கடிகமழ்செந் தாமரைபோற் கண்ணும் - துடியிடையும்
அல்லும் பகலு மனவரத முந்நினைந்தாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி."



## க.—விழாவறைகாதை.

பண்டைக்காலத்திற் காவிரிப்பூம்பட்டினத்தை வளமுறச்செய்வித்தற்கு நினைந்த அகத்தியமுனிவருடைய கட்டளையின்படி, தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியனென்னுஞ்சோழன், இந்திரனைவணங்கிக் குறையிரந்து அவனனுமதிபெற்று இருபத்தெட்டுநாள் அந்நகரில் நடத்தியதும், அச்சோழன்காலத்திற்போலவே பிற்காலங்களில் அவன்பரம்பரையோரால் வருடங்கள்தோறும் நடத்தப்பெற்றுவந்ததுமாகிய இந்திரவிழாவை நடத்தக்கருதிய அந்நகரத்துள்ள பல சமயவாதிகளும் பிறரும் ஒருங்குகூடி, "இந்திரவிழாவை நாம் மறந்தால் முசுகுந்தனது துயரைப் போக்கியதான நாளங்காடிப்பூதம் துன்பஞ்செய்யும்; பாவிகளைப் புடைத்துண்பதாகிய சதுக்கப்பூதம் இந்நகரை விட்டுநீங்கும்; ஆதலால், இவ்விழாவை நடத்துவோமாக" என்று தம்முள் நிச்சயித்துக்கொண்டு, அவ்விழா நடக்கப்போதலை நகரத்தார்க்கு அறிவிக்கும்படி முரசறைவோனுக்குச்சொல்ல, அவன், வச்சிரக்கோட்டத்துள்ளமுரசை யானையின் பிடரிலேற்றி, முதலில் ஊழைவாழ்த்தி, "மேகம் மாதந்தோறும் மும்மழைபொழிக; அரசன் செங்கோலினனாகுக; அறிஞர்களே, இந்திரவிழா நடக்குங் காலத்திற் சுவர்க்கலோகம் வறிதாகும்படி எல்லாத்தேவரும் அதனைநீங்கி இங்கே எழுந்தருளுவாரென்பது பெரியோர்க

தருமவழியே தேடியபொருள்கள் பலவற்றையும் ஏழுதினத்துள் இரவலர்களுக்குக்கொடுத்துவிட்டுப் பின்பு தவஞ்செய்வானாயினன்; அவன் அக்காலத்தில் புத்ததேவனுக்குக் கட்டுவித்த சைத்தியத்தைத்தரிசித்தற்காகவே வந்தேன்; காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல்விழுங்கிவிடுமென்ற செய்தியை ஈண்டுள்ள முனிவர்கள் துணிந்துகூறக்கேட்டு அந்நகரஞ்செல்லாமல் இவ்விடத்திலேயே இருந்துவிட்டேன்; தீவினையுடைமையாற் கொலையுண்டிறந்த உன் தந்தை, நல்வினையால் தெய்வயாக்கையைப் பெற்றுப் பின்னும் தீவினைப்பயனை அனுபவித்து, அப்பால், புத்ததேவன் அவதரித்துச் செய்யுந் தருமோபதேசத்தைக் கேட்டு வீடடைவானென்று அறிந்தோர்கூறக் கேட்டேன்; நானும் அக்காலத்தில் அவ்வறமொழிகளைக் கேட்பேன்; உனது பிற்காலச்செய்திகளை நீ கந்திற்பாவையாலறிந்தாயென்று அறவணவடிகளாலறிந்தேன்; அம்முனிவர், உனக்குத் தருமோபதேசஞ்செய்தற்கு அமைந்தவிடம் காஞ்சிநகரமென்றெண்ணி இங்கிருந்து அங்கேசென்றார்; மாதவியும் சுதமதியும் அவருடன் அந்நகரம் போயினர்; இன்னுங்கேட்பாயாக; மழையில்லாமையாற் காஞ்சிநகரத்தில் மிக்க வறுமையுண்டாயிற்று; பலவுயிர்கள் இறந்தன; அந்நகரில் ஐயமிடுவோர் இல்லாமற்போனமையால், அங்கேயிருந்தமுனிவர்கள் இவ்விடம் வந்துவிட்டார்கள்; ஆதலால், அந்நகரமடைந்து எல்லாவுயிர்களையும் பாதுகாத்தல் உனக்குக் கடனாகும்" என்றுசொல்ல, மணிமேகலை அவனைவணங்கி, அமுதசுரபியைக் கையிலேந்திக்கொண்டு, வஞ்சிநகரத்தின் மேற்றிசையினின்று மேலேயெழுந்து ஆகாயவழியே வடதிசைக்கட்சென்று, மிக்கசெல்வங்குன்றி வறுமையுற்று அழகுகெட்டுப்போயிருக்கும் காஞ்சிநகரத்தைக்கண்டு மனமிரங்கி வலமவந்து அந்நகரினடுவேயிறங்கி, அங்கே தொடுகழற்கிள்ளியின் துணைவனாகிய இளங்கிள்ளியாற் கட்டுவிக்கப்பட்டுள்ள புத்தாலயத்தை வணங்கி அதற்குத் தென்மேற்கிற் சென்று ஒரு சோலையில்தங்கினள்; அதனைத்தெரிந்த ஒருவன், விரைந்துசென்று அரசனைவணங்கி, 'அரச! கோவலன்புதல்வி; சிறந்த தவஞ்செய்தொழுகுபவள்; இச்சம்புத்தீவில் எல்லாருள்ளுஞ்சிறந்தவள்; அவள் கையிலேந்திய அமுதசுரபியென்னும் பாத்திரத்தோடு இந்நகரில்வந்து தருமதவனத்தே

உறைகின்றாள்' என்றான். அதுகேட்ட அரசன் கந்திற்பாவை முன்பு நமக்குக்கூறியது உண்மையேயென்று மதித்து அத்தெய்வத்தைவந்தித்து மந்திரிகளுடன் விரைந்துசென்று மணிமேகலையையடைந்து அவளைநோக்கி,

"செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ
கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ
நலத்தகை நல்லாய் நன்னா டெல்லா
மலத்தற் காலை யாகிய தறியேன், (உஅ-கசுக).

இனிச்செய்வது யாது?" என்று மயங்கிக்கொண்டிருந்தேன்; இருந்தபொழுது, ஒரு பெரியதெய்வம் எனக்கு முன்னேவந்து, "நீ வருந்தற்க; உனது நலவினையால் ஒருமடந்தை இங்கே தோன்றுவள்; அவளுடைய கையிலுள்ள தெய்வபாத்திரத்திலிருந்து எடுக்க எடுக்கக் குறையாமல் மேன்மேலும் வளருகிற உணவால் இவ்வுலகமெல்லாமுய்யும்; அவளுடைய கருணையால் மேகமும் மிக மழைபொழியும்; அவள் இந்நகரத்திற்குவந்தபின்பு உண்டாகும் விசேடங்கள் பலவாம்; கார்வறங்கூறினும் நீர்வறங் கூராது; அவள் வந்திருத்தற்காகக் கோமுகியென்னும் பொய்கையும் அதனையுடைய மணிபல்லவமென்னுந்தீவும் இங்குவந்தனவென்று சொல்லும்படி, இந்நகரவீதியில் ஒருபொய்கையையும் அதனைச்சூழ ஒரு சோலையையும் உண்டுபண்ணுக" என்று சொல்லிவிட்டுப் போயிற்று; அத்தெய்வம் போனபின்பு அது கட்டளையிட்டபடியே செய்துவைத்த இடம் இஃது" என்று சொல்லி அவ்விடத்தைக் காட்ட, மணிபல்லவம்போன்ற அச்சோலையையடைந்து அதையும் பொய்கையையுங்கண்டு மகிழ்ச்சியுற்ற மணிமேகலை, தனது பழம்பிறப்பை அறிவுறுத்திய புத்தபீடிகையை அச்சோலையில் இயற்றுவித்துத் தீவதிலகையையும் மணிமேகலாதெய்வத்தையும்வழிபடுதற்குரிய கோயிலையும் அங்கே உண்டாக்கி நித்திய பூசையையும் திருவிழாவையும் அரசனைக்கொண்டு செய்வித்துத் தான் வந்திருந்து துதித்து மேற்கூறிய புத்தபீடிகையில் ஆருயிர்மருந்தெனும் அமுதசுரபியை வைத்து, உண்ணுதற்கு எல்லாவுயிர்களும் வருகவென்று அழைத்தனள்; அழைக்கவே,

மொழிந்த மூவறு பாடை மாக்களிற்
காணார் கேளார் கான்முட மாவோர்

பேணு மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோ யுற்றோர்
மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னூ றாயிரம் விலங்கின் றொகுதியு
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி, (உஉக - உஉஎ).

உண்ணவுண்ண அவ்வுணவு மேன்மேலும் பெருகிப் பசித்துன்பத்தை அகற்றி விளங்கியது; அப்புண்ணிய விசேடத்தால், எங்கும் மழைபெய்தது; வளங்கள் மிகுந்தன. அப்படி நிகழுங்காலத்தில், அறவணவடிகள், அந்நிகழ்ச்சிகளைக் கேட்டு மாதவியோடும் சுதமதியோடும் அறச்சாலையை யடைந்தனர்; கண்ட மணிமேகலை விரைந்துசென்று அன்புடன் வணங்கி அவரடிகளைவிளக்கி ஆதனத்திலிருத்தி அறுசுவைப்போனகம அமுதுசெய்வித்து, "யான் செய்த புண்ணியம் தப்பாது பலித்திடுக" என்றுசொல்லி மீட்டும் வணங்கினள்.

## உ௯.—தவத்திறம்பூண்டு தருமங்கேட்டகாதை.

வணங்கிய மணிமேகலையை வாழ்த்திச்சொல்லும் அறவணவடிகள், "பீலிவளைபெற்ற குழந்தையைக் கம்பளச்செட்டி கடலிற கெடுத்தது தெரிந்த அரசன் வருத்தமுற்று அக்குழந்தையைத் தேடியலைந்தமையாற் காவிரிப்பூம்பட்டினத்தில இந்திரவிழாச் செய்யப்படாது போயிற்று; மணிமேகலா தெய்வம் அதுதெரிந்து, 'நகரைக் கடல்கொள்ளுக' என்று சபித்தது; இந்திரனும் சபித்தான். அதனால், அந்நகரம் கடலால் விழுங்கப்பட்டது. அப்பால் உன் தாயரும் யானுமாக உன்பொருட்டு இந்நகரம் அடைந்தேம்" என்று கூறினர்; கூறவே மணிமேகலை அவருடைய அடியிணையை வணங்கி, "மணிபல்லவத்தில் புத்தபீடிகையைக் காத்துக்கொண்டிருக்கும் தீவதிலகையென்பவளும் இச்செய்தியைச்செப்பினள். நான் வேற்றுருக்கொண்டுசென்று வஞ்சிநகரமடைந்து ஆங்குள்ள பலசமயவாதிகள் கூறிய கொள்கைகள்யாவும் மனத்திற்குப் பொருந்தாமையால் அவற்றையும் முன்புகொண்டிருந்த வேற்றுவடிவத்தையுந் துறந்து இந்நகரமடைந்து நும்மைச் சரணபுக்கேன்; தேவரீர் அடிச்சிக்கு உண்மைப்பொருளையுணர்த்தியருளவேண்டும்" என்று பிரார்த்திக்க, அவர் பிரத்தி

யக்ஷம், அனுமானமென்னும் இரண்டு அளவைகளின் இலக்கணங்களையும் அவற்றின்போலிவகைகளையும் உண்மையறிவுண்டாதற்குக்கருவியாக அவளுக்கு விளங்கக்கூறினர்.

## ௩௦.—பவத்திறமறுகெனப் பாவைநோற்றகாதை.

தானஞ்செய்தலை மேற்கொண்டு சீலத்தில் முதன்மையாக நின்று பழம்பிறப்பின் உணர்ச்சியையடைந்த மணிமேகலை, அப்பால், 'புத்தம சரணங்கச்சாமி', 'தர்மம்சரணங்கச்சாமி', 'ஸங்கம்சரணங்கச்சாமி' என்பவற்றை மூன்றுமுறை சொல்லி, மும்மணிகளையும் மூன்றுமுறைவணங்கி அறவணவடிகளைச் சரணாகதியாக அடைந்தாள்; அடையவே பௌத்த தருமத்தை உபதேசிக்கத்தொடங்கிய அவர், "இதனைகேட்பாயாக:—உயிர்களெல்லாம் அறிவிலலாமல் இருந்தகாலத்தில் தேவர்கள் பிரார்த்திக்கத் துடிதலோகத்தினின்றும் இவ்வுலகிலவதரித்து அரசமரத்தினடியிலேயிருந்து தத்துவத்தை ஆராய்ந்தறிந்து மாரனைவென்று முக்குற்றங்களையும் அறுத்து விளங்கிய புத்ததேவன் அருளிச்செய்த இன்பமயமாகிய கட்டளையாகும் இது; பண்டைக்காலத்தில் அவதரித்த அளவற்ற புத்தர்கள் கருணைமிகுந்து திருவாய்மலர்ந்தருளியதும் இதுவே" என்று சொல்லி, பேதைமைமுதலிய பன்னிருநிதானங்களின் தோற்றவொடுக்கங்களையும் பிறவற்றையும் முறையே விளங்க உபதேசித்து உன்மனத்திருள் நீங்குக" என்றுகூறி ஞானதீபத்தை நன்குகாட்டினர்; மணிமேகலை அவ்வுபதேசமொழிகளைக்கேட்டு ஐயந்திரிபறவுணர்ந்து, "பிறவித்துன்பம் ஒழிவதாக" என்று அந்நகரிலேயே நோறறுக்கொண்டிருந்தாள்.

# அரும்பதவுரை.



முதலாம் காதை

1 காவிரிப்பூம்பட்டினமென்பது சோழராசாக்களுடைய பழைய இராசதானி, இது, காவிரிநதி கடலோடு கலக்குமிடத்து இருந்தநகரம், பட்டினம் - கடற்கரையிலுள்ள ஊர்.

3 தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியன் - ஒருசோழன்; இச்சொற்குப்பொருள் தூங்கு எயில் - அசைந்துகொண்டிருந்தமதிலை, எறிந்த - அழித்த, தொடி தோள் செம்பியன் - வீரவளையை அணிந்த தோளையுடைய சோழன்; சிபியின்குலத்திற் பிறந்தோர் சைப்பியர், சைப்பியர் பரம்பரையிற்பிறந்தவன் செம்பியன், செம்பியன் - சோழன் அம்மதில் மூன்றென்றும், அவைகள் கொடியவர்களுக்கிடங்களாகி ஆகாயத்தில் அசைந்துகொண்டேசென்று உலகைவருத்தினவென்றும் அவற்றையும் அவற்றிலிருந்தவர்களையும் இச்சோழன் அழித்தானென்றும் பதிற்றுப்பத்து, புறநானூறு, பழமொழி, சிலப்பதிகாரம், மூவருலா முதலியவைகள் தெரிவிக்கின்றன.

8. இந்திரவிழா - இந்திரனுக்குச் செய்யும் உத்ஸவம், இஃது அக்காலத்து நடைபெற்றுவந்ததென்று பதிற்றுப்பத்தாலும் சிலப்பதிகாரத்தாலும் தெரிகின்றது.

10 - 11. முசுகுந்தன் - சூரியகுலத்துப்பிறந்து விளங்கிய ஒரு சக்கரவர்த்தி, இவ்வரசன் தேவர்களுடைய வேண்டுகோளாற் சென்று கொடிய அசுரர்களோடு போர்செய்கையில் அவ்வசுரர்கள் பிரயோகித்த தாமஸாஸ்திரத்தாற் கண்ணும் மனமும் இருண்டு துயருற்றபொழுது பூதமொன்று தோன்றி ஒருமந்திரத்தையுபதேசித்து இவனுடைய துயரத்தைநீக்கினமையின், இவன் அப்பூதத்தைக் காவிரிப்பூம்பட்டினத்தில் மருவூர்ப்பாக்கம் பட்டினப்பாக்கமெனனுமிரண்டற்கும் நடுவேயுள்ளதாகிய நாளங்காடியிற் பிரதிஷ்டிப்பித்து வழிபடுவானாயினன், இதனால், அப்பூதம் நாளங்காடிப் பூதமெனப்பெயர்பெற்றது. நாளங்காடி - காலைக்கடைத்தெரு.

11 - 12 பாவிகள் - தம்மைப் பிறர் நம்புவதற்குத் தவவேடத்தில் மறைந்துநின்று அத்தவத்திற்கு ஒவ்வாதவற்றில் ஒழுகும் பொய்வேடமுடையார், தம்மைக் கற்புடையவர்கள்போலவே புலப்படுத்தி வியபிசாரஞ்செய்யுமடந்தையர்கள், அரசனுக்கு விரோதமான காரியங்களை அவனறியாமற் செய்யும் மந்திரிகள், பிறருடைய மனைவியரை விரும்புவோர், பொய்ச்சாக்ஷிபகர்வோர், புறங்கூறுவோர் என்னும் அறுவர் சதுக்கப்பூதம் - நாலுதெருக்கள் கூடுமிடத்து உள்ள தெய்வமாகிய பூதம்.

15. வச்சிரக்கோட்டம் - இந்திரனுடைய வச்சிராயுதமிருக்குங்கோயில் காவிரிப்பூம்பட்டினத்திலிக்கோயிலிருந்ததென்று சிலப்பதிகாரம், கனாத்திறமுரைத்தகாதையாலும் தெரிகின்றது.

21. பூரணகும்பம் - நீர்நிறைந்தகுடம்.

22- பாவைவிளக்கு - பிரதிமைகளேந்தும் தீபம்.

26. நாற்றுமின் - தொங்கக்கட்டுங்கள். மன்றம் - ஊர்க்கு நடுவே எல்லாருமிருக்கும்படியமைந்த மரத்தினடி.

32. அம்பலம்-பொதுவாகியசபை.

உ - ம் காதை.

[ஊரலருரைத்த காதையென்பதற்கு ஊரிலுள்ளார்கூறும் பழிமொழியை வஸந்தமாலையென்பவள் மாதவிக்குச்சொல்லியகாதையென்பது பொருள்.]

6. அவளுக்கு - மாதவிக்கு.

8 மலர்மண்டபம் - பூதநெரிபுத்தற்கு அமைந்தமண்டபம.

12. கணவன் - கோவலன்.

13. கொலையுண்டது - தேவியின் காற்சிலம்பைத் திருடினானென்று எண்ணிய பாண்டியன்நெடுஞ்செழியனுடைய ஏவலாளனாற் கொலைசெய்யப்பெற்றது.

14. பத்தினிக்கடவுள்-பதிவிரதையாகிய தெய்வம்; தன்கற்பின்மிகுதியால், மதுரையை எரித்தமையின், கண்ணகி பத்தினிகடவுளென்றும் மறகற்புடையளென்றும் கூறப்படுபவள்.

14 - 15. மணிமேகலையைக் கண்ணகியின்மகளென்றது உபசாரம்.

16. பரதைமைத்தொழில - பரத்தையர்க்குரியதொழில.

21 - 24. இவற்றால, பௌத்தசமயத்தாரகூறும துக்கம், துக்கநிவாரணம், துக்கோற்பததி, துக்கநிவாரணமார்க்கமென்னும் ஸத்தியங்கள் நான்கும் கூறப்படுகின்றன; 'பிறந்தோருறுவது பெருகியதுன்பம்' என்றது, துக்கத்தை. 'பிறவாருறுவது பெரும்பேரின்பம்' என்றது, துககநிவாரணத்தை. 'பற்றின்வருவது முன்னது' என்றது, துக்கோற்பத்தியை. 'பின்னது அற்றோருறுவது'என்றது,துக்கநிவாரணமாரக்கத்தை. பற்று-ஆசை. முன்னது - துக்கம். பின்னது - துக்கநிவாரணம். அற்றோர் - பற்றற்றோர்.

25. வாய்மை - ஸத்தியம்.

25 - 26. பஞ்சசீலம் - ஐந்துசீலங்கள்; அவைகளாவன: காமம், கொலை, கள், பொய், களவு என்னும் இந்தஐந்தையும் முற்றத்துறத்தல். கடைப்பிடி - உறுதியாகப்பற்றுவாய்.

ங - ம் காதை.

3. நற்காலநிகழ்ச்சியை எதுநிகழ்ச்சியென்பது பௌத்த ஸமபிரதாயம்.

14-15. காமன் நடுங்குவது, தனது ஆஞ்ஞை இனி எங்கும் செலலாதென்பதுபற்றி. பாவை-பிரதிமைபோல்வாள்.

18. பேடியர் - நபும்ஸகர்.

25. வித்தியாதரசாதியென்பது தேவகணங்கள் பதினெட்டுவகையினுள் ஒன்று.

31. இலவந்திகை - யந்திரங்களையுடைய குளம்.இலவந்திகைச்சோலை-அரசன் உரிமைகளோடு விளையாடுமகாவற்சோலை.

32. உய்யானம்=உதயானம் - அரசன்விளையாடும காவற்சோலை.

36. தூக்குதலால் - தொஙகச்செய்தலால். பாசம் - கயிறு.

38. சம்பாதி - கழுகுகளுக்குத்தலைவனானபக்ஷி. மேலேபறந்துசெல்பவர்யாரோ அவரே வலியில்மிக்கவரென்று சகோதரர்களாகிய சமபாதியும் சடாயுவும தஙகளுட் சபதங்கூறிகொணடு மேன்மேலேபறந்துசெல்லுகையில, சூரியமண்டலத்தைச் சமீபித்த சமபாதியின்சிறகுகள் அம்மண்டலவெப்பத்தால் எரிந்துபோயினவென்பது இராமாயணம் ஆரணியகாண்டத்திலுள்ள வரலாறு.

43. ஓம்பும் - பாதுகாக்கும்.

44. பூட்கை - கொள்கை.

45. பகவன்-புத்ததேவன். ஆணை-கட்டளை.

46. உவவனம்=உபவனம் - பூஞ்சோலை.

48. பளிக்குமண்டபம் - பளிங்குமண்டபம்.

50. பதுமபீடம்-புத்ததேவருடையபாதவடிவங்கள்வைத்து பூசிக்கப்படும ஆஸனம.

52. இதுகாறும் - இதுவரையும்.

68. உணுநோன்பி-கள்ளையுண்ணுதவிரதமுடையவன்.

74. களிமகன் - கட்குடியன்.

77. பேடி-புறக்கூத்துப் பதினொன்றனுள் ஒன்று; இஃது, உஷைகாரணமாக வாணாசுரனாற் சிறைவைக்கப்பட்ட தன்மகன் அநிருத்தனைச் சிறைமீட்கப் பேடிவடிவங்கொண்டு, காமன் சோநகரத்தில் ஆடிய ஆடல்; உஷை - வாணாசுரன்மகள்.

86. தாய் - மாதவி.

௪ - ம் காதை.

[பளிக்கு அறை - பளிங்காலாகிய அறை.]

2. பொய்கை - தடாகம்.

6. நாடகக்கணிகையர் - நாடகப் பரத்தையர்.

7. யாழ் - வீணை.

8. கோடு - வீணையின் உறுப்புக்களுள் ஒன்று; இது, 'வீணாதண்டம்' என்றும் கூறப்படும். பாவை-பிரதிமை.

9. 'எட்டி' என்பது, வைசியர்களுள் மிக்க கௌரவமுடையவர்க்கு அரசனாற்கொடுக்கப்படும் பட்டப்பெயர். எட்டியாகிய குமரன், சாளரம்-பல்கணிவாயில்.

15. கொடுந்துன்பம் - வெட்டுண்டிறந்தது.

16. நரம்பு - தந்தி; பகை நரம்பு - பகையாகியதந்தி.

29. தாழ்க்கோல்-தாழாகியகோல்; [தாழ் - தாழ்ப்பாள்.]

31. ஐந்துவிற்கிடை-ஐந்துவிற்கள் ஒன்றன்பின் ஒன்றாகக்கிடக்கும் அளவு.

34. முதுக்குறைவு - பேரறிவு.

36. வேட்கை - ஆசை,

37. பௌத்தசங்கத்தார்-பௌத்தமதத்தினராகிய கூட்டத்தார்.

41 - 44. தம்முட் பகைமைகொண்டோர்களாகிய முதியவர்களிருவர், தம்முடைய வழக்கைச்சொல்லித் தீர்த்துக்கொள்ளநினைந்து கரிகாற்சோழன்பால்வந்து கண்டு, 'இவன் மிகவும் இளையவனாக இருக்கிறான்; நம்முடையவழக்கை எங்ஙனம் தீர்த்திடுவான்' என்றுகூறக்கேட்டு நாணமுற்ற அவன், உடனே முதியவனாக வேடம்பூண்டுவந்து வீற்றிருந்து அவர்கள் வழக்கைக்கேட்டு ஆராய்ந்து தீர்த்து விடுத்தனனென்பது பழமொழி, பொருநராற்றுப்படை முதலிய நூல்களிற்கண்ட வரலாறு. இளமையில் தன்னுடைய கால் நெருப்பாற் கரிந்துபோனமையின், அவன் இப்பெயர்பெற்றான். வழித்தோன்றலே-பரம்பரையிற் பிறந்தவனே. ஆண்டு-வருஷம்.

47 - 55. இவற்றால், மணிமேகலையை உதயகுமரன் விரும்பாதிருத்தற்பொருட்டு, உடம்பின் அசுத்தத்தைச் சுதமதிகூறுகின்றாள்.

47. வினையின்வந்தது - (மக்களின் உடம்பு) கன்மத்தால் வந்தது. வினைக்கு விளைவு ஆயது - கன்மத்துக்கு விளைநிலமாகவுள்ளது.

48. புனைவன - சந்தனம் மலர் முதலியன.

49. மூத்து விளிவு உடையது - முதுமையுற்று இறத்தலையுடையது. இருக்கை - இருப்பிடம்.

50. பற்று - ஆசை.

51. அரவு அடங்கு புற்றின் செற்றம் சேக்கை - பாம்பு அடங்கப்பெற்ற புற்றுப்போலச் செற்றத்திற்குத் தங்குமிடமாகவுள்ளது; செற்றம் - நெடுங்காலம் நிகழும் கோபம்.

52. அவலம் - வருத்தம் தோன்றியவிடத்தே உண்டாகும் சோர்வு. கவலை - யாது செய்வேமென்றல். கையாறு - மூர்ச்சித்தல். அழுங்கல் - வாய்விட்டழுதல்.

53. தவலா உள்ளம் - மேற்கூறிய அவலமுதலியநான்கும் கெடாத உள்ளத்தை.

55. இதனை - இவ்வுடம்பை. புறமறிப்பாராய் - புறமறியாகப்பார்ப்பாயாக; பார்த்தால், இதன் தூய்தன்மை விளங்குமென்றபடி; புறமறி - உடம்பின்வெளிப்பக்கத்தை உட்பக்கமாகவும் உட்பக்கத்தை வெளிப்பக்கமாகவும் பார்த்தல்; "பைம்மறியாப் பார்க்கப்படும்"என்பது, நாலடியார்.

### ௫ - ம் காதை.

4. அஃது - அவ்வாயில்.

7. எத்திறத்தினள் - எத்தன்மையையுடையவள்.

13 - 17. சமணமதமும் பௌத்தமதமும் தம்முள் மிரம்ப விரோதமுடையவை.

23. தன்வயம் - தன்வசம்.

27. சங்கமுகத்துறை - காவிரிநதி கடலொடுகலக்குமிடத்துள்ளதுறை.

30. தன்னை ஒரு வித்தியாதரன் கைபபற்றிக்கொண்டு போனமையின், 'தருவியில்லேன்' எனறாள்.

37 - 38. சமணபபள்ளி - சமணருறைவிடம்.

44. ஐயம - பிச்சை.

46. சீவர ஆடையென்பது பௌத்தமுனிவர்களுடுக்கும ஆடைக்கு வழஙகுவதோா பெயா; அது, மருதந்துவரில் தோய்க்கப்பட்டு மஞ்சள்நிறமுள்ளதாக இருபபது.

37 - 50. சைனாகளைக்காட்டிலும் பௌத்தர்களுககு ஜீவகாருணியம அதிகமுண்டென்பதைப் புலப்படுத்தியிருக்கின்றனர்.

56. இயல் குணன் - இயல்பாகவே தோன்றிய குணங்களையுடையவர்.

57. உலகநோன்பு - உலகசீலத்தை, பல கதி உணர்ந்து - பலபிறப்புக்களிலும் பிறந்து பிறந்து அறிந்து; புத்தன் பல சனனங்களையும் எடுத்து எல்லாவுயிரிடத்தும் கருணையைச் செலுத்திவந்தானென்பது வரலாறு.

58. தனக்கென வாழா - தான் சீவித்திருத்தல் தனக்கேயென்று நினையாத, பிறர்க்கு உரியாளன் - பிறர்க்கே உரிமைபூண்டு ஒழுகுபவன்; வாழாமை, புத்தருக்கு அடை; "தனக்கென், றொன்றுனுமுள்ளான் பிறர்க்கேயுறுதிசூழ்ந்தான்" என்பது குண்டலகேசி.

59 இன்பச்செவ்வி - முத்தியடைதற்குரிய பருவத்தை. மன்பதை எய்த - உயிாப்பன்மைகள் அடைய.

60. அருளறம் - தயாதர்மத்தை. இது காருண்யமெனவும் வழங்கும். பூட்கை - மேற்கோள்.

59 - 60. எய்தப் பூண்டவென்க.

61. அறக்கதிர் ஆழி - தருமசக்கரத்தை; தருமத்தைச் சககரமாகக் கூறுதல் பௌத்தமத ஸம்பிரதாயம்; புததனுக்குத் தருமசக்கரப் பிரவர்த்தனுசாரியனென்று ஒரு பெயருண்டு.

62. காமற் கடநத - மாரனைவென்ற; மாரன் - தர்ம விரோதிகளான இச்சைகளை மனதிலுண்டாக்கும் ஒரு தேவன்; [இங்ஙனம் கூறுவது பௌததமதக்கொள்கை]. வாமனென்பது புத்தனபெயர்.

64 - 65. அதுமுதல் - சங்கதருமன் உபதேசிததது முதல்.

73. வருணக்காப்பு - வருணங்களுக்கு எற்ற காவல்; வருணமாகிய காவலெனலுமாம்.

82. புலவன், தீர்த்தன் முதலியவை புத்தனுடைய பெயர்கள. தீர்த்தன் - தேவன். புராணன் - பழையவன்.

83. என்கோ - என்பேனோ.

84. குறறம - காமவெகுளி மயக்கங்கள். செற்றம் செறுததோய் - தணியாதகோபததை அடக்கியவரே.

85. புத்தனுக்கு ஸர்வஞ்ஞனென்று ஒரு பெயருளதாதலின், 'முற்றவுணர்ந்த முதல்வா' என்றாள்.

86. ஏமம - பாதுகாப்பு.

87. தீநெறி - கெட்டவழி.

88. ஆயிரஆரத்து ஆழியன் - பாதத்தில் ஸஹஸ்ராரசக்கரரேகையையுடையவன்.

89. எவன் - யாது.

### ௬ - ம் காதை.

3. அறவாழி - தருமசக்கரம்.

5. 'நீங்கள்' என்றது மணிமேகலையையும் சுதமதியையும்.

26. நன்சாடு - சுடுகாடு.

28. காளிகோட்டம - காளிகோயி[ல்.

36. காவற்காரர் - மயானத்தைக் காப்போர்.

38. பிணங்களைச்சுமமாபோகட்டு விடுதல் சிலஜாதியாருடைய வழக்கம்.

39. தாழி - நவபாணட விசேடம்; பணடைக்காலததிற் பிணங்களைக்கவித்ததாழிகள் இக்காலத்தில முதுமக் கட்டாழியென வழங்கும்.

41, சாப்பறை - பிணப்பறை.

44. பேராந்தைகளின் ஒலி சுட்டுக் குவியென்னும் வடிவமாகத்தோற்றுமென்பர் பழையதமிழநூலார்; புறநானூறு, 240-ம செய்யுளைப்பாாக்க.

45. ஆண்டலைப்பறவை - ஆண்மகனது தலைபோன்ற வடிவமுள்ள ஒரு வகைப்பறவை.

49. மன்றம - பொதுவானஇடம்.

51. காபாலிகஸமயததோர் சுடலையிலிருந்தே தவஞ்செய்தல மரபு.

56. மணடை - பாணடவிசேடம்; அஃது இக்காலத்து, ‘வாணாய்’ என்றுவழங்கும.

63. கொடுந்தொழிலாளன் - யமன்.

65. கழிபெருஞ்செல்வக்கள் - மிகப்பெரியசெலவமாகிய கள்.

66. நல்லறம் - தயையோடுகூடிய தருமம.

75. பார்ப்பானென்றது கணவனை.

77. அணங்கு - காமநெறியால் உயிர்கொள்ளுந்தெய்வமகள்.

92. இழவூழ் - நாசத்துக்கு ஏதுவாகிய ஊழவினை.

103. ஈமப்புறங்காடு - பிணஞ்சுடுதற்கு அடுக்கும விறகடுக்குக்களையுடைய சுடுகாடு.

104. ஆயிரம் கோட்டம் அமைந்தன.

105. நிரயக்கொடுமொழி - நரகத்தைத்தரும் கொடுமையான வார்த்தை.

110 - 111. எல்லாவுலகத்தையும் தன்னுளடக்கியகோளத்தைச் சக்கரவாளமென்பது பௌத்த நூற்கொள்கை.

114. நான்குவகை அருவப்பிரமகணங்கள் - நான்குவிதமாகவுளள அருபத்தையுடைய பிரஹ்மஜாதி கணங்கள்; இவர்கள், உலகம முப்பத்தொன்றனுள் இருபதடெட்டாவதாகிய ஆகாசாநந்தியாயதனலோக முதலிய நான்கு உலகங்களிலுமுள்ளவர்களென்பர். [மணிமேகலையுரைப்புததகம, 3 - ம் பக்கமபார்க்க].

114 - 115 பதினாறுவகை உருவப்பிரம ஜாதிகணங்களாவா; இவர்கள், மேறகூறிய உலகம் முப்பத்தொன்றனுள் பன்னிரண்டாவதாகிய பிரஹ்மகாயிகலோகமுதலிய பதினாறிலுமிருப்பவாகள்; [மணிமேகலையுரைபுததகம 3 - ம பக்கமபார்க்க.]

115 - 116. அறுவகைதெய்வசாதிகணஙகளாவார் - உலகம் முப்பத்தொன்றனுள் முதலாவதாகிய மகாராஜிகலோகமுதலிய தெயவலோகம ஆறிலு முள்ளவர்கள; [மணிமேகலை உரைபுத்தகம் 3 - ம் பக்கம்பார்க்க].

117. எணவகைநரகர் - மஹாநிரயம, ரௌரவம், காலஸூத்திரம, ஸஞ்சீவனம, மகாவீசி, தபனம, ஸம்பிரதாபனம, ஸமஹாதம் என்னும அ - நரகலோகங்களிலுமுள்ளவர்கள.

123. சமபாபதிகூறியது இறந்தவுயிரை மீட்டல் இயலாததென்பது.

142. யோசனை - பத்துநாழிகை வழித்தூரம்.

எ - ம் காதை.

6 கோல் - செங்கோல். கோள் - நவக்கிரகங்கள்.

7. மாரி வறம் கூரும் - மழை இல்லையாகும.

11. தவத்திறம்பூண்டோள் - மணிமேகலை.

12. அவத்திறம் - தீயசெய்கை.

23. அற்புதங்கள் - ஆச்சரியச் செயல்கள்.

30. நனவு - விழிப்புக்காலம்.

36. உலக அறவி - ஊரமபலம், எல்லாச்சாதியாரும வந்து தங்குதற்குரிய தருமசாலை.

38. அதிட்டித்திருக்கும - சேர்ந்திருக்கும.

40 - 47 இவ்வடிகளாற்கூறியவை சுதமதியின் பூர்வபிறப்பின்வரலாறு. [௧௧ - ம் காதையைப்பார்க்க].

**௮ - ம் காதை**

11. மனம் நடுக்குறூஉம் - மனம் நடுங்கும். மாற்றம் - சொல்.

12. மயங்கும் - மயங்குவாள்.

13. மெல்வினை - மெல்லியவினைகளை யுடையாய்.

19. தந்தை - கோவலன்.

21. மாதா - கண்ணகி. வேற்றுநாடு - பாண்டிநாடு.

22. வைவாளெழுந்த - கூரியவாளால் வெட்டுண்டிறந்த. அகலம் - மார்பு.

25. பீடிகை - பீடம்.

**௯ - ம் காதை.**

1. விம்மிதம் - ஆச்சரியம்.

6. 'மாதவ' என்றது - பிரமதரும முனிவனை.

21. பாடிவீடு - சேனைகளோடுதங்கும் கூடாரம்

33. திட்டிவிடம் - கண்ணில் விடத்தையுடையதாகிய ஒருவகைப் பாம்பு.

36. நள்ளிரவு - நடு இராத்திரி.

42. கேள்வன் - கணவன்.

**௧௦ - ம் காதை.**

5 - 13. இவ்வடிகள் புத்தபாதபீடிகையின்துதிகள்.

6. பொருள் - தருமம்.

7. வறம் தலை உலகத்து - வறுமையைத் தன்னிடத்தேயுடைய உலகத்து, அறம் பாடு சிறக்க - தருமத்தின் தோற்றம் அதிகரிக்கும்படி.

8. சுடர் - சூரியன். வழக்கு - வழங்குதல்.

9. இளவளஞாயிறு - பாலசூரியன்.

20. ஊடி - பிணங்கி.

23. பிரவிருத்திக்கச்செய்து - பரவச்செய்து.

24. சாரணமுனிவன் - ஆகாய கமனமுதலிய சித்திபெற்றமுனிவன்.

25. பௌத்தமுனிவர் உச்சிப்பொழுதிற் பிச்சைக்குச்செல்லுதல் மரபு.

34. அமுது - அன்னம்.

41. நின்னுங்கு ஒழியாது - நின்னை ஒழியாது; ஆங்கு, அசை

69. வேற்றுவடிவம்-வேறுவடிவம்.

70. இன்றியமையாதது - ஆவசியகமாகவுள்ளது.

73. நனிசுதல் ஒழிகலை - அடைதல் நிச்சயம்

78. மக்கள்யாக்கை - மனிதருடம்பு.

**௧௧ - ம் காதை.**

15. பயன் - பிரயோசனம்.

20. படிமைகள் - வடிவங்கள்.

29. தரும்பதம்-தருமங்களைப் புலப்படுத்தும் சொற்கள்.

30. பெரியை - பெருமையையுடையாய்.

31. மயங்கிய - கலந்த

32. இலஞ்சி - தடாகம்

33. அக்ஷயம் - குறைதலில்லாதது.

35. வைசாகசுத்தபூரணிமை - வைகாசிமாஸத்தில் விசாக நக்ஷத்திரத்தோடுகூடிய பௌர்ணிமைத்திதி

47 - 58. இவ்வடிகளால் புத்தஸ்துதி கூறப்பெற்றுள்ளது.

48. தீநெறிக்கடும்பகை - காமமுதலிய ஆறுகுற்றங்கள். இவை அரிஷட்வர்க்கமென்று கூறப்படும்.

49. பிறர்க்கு அறம் முயலும் - மற்றையோர்க்கு அறமுண்டாதற்கு முயற்சிசெய்கின்ற.

50. துறக்கம் - தேவலோகம்.

51. எண் பிறக்கு ஒழிய இறந்தோய் - மனிதர்களுடைய எண்ணங்கள் எட்டாமற் பின்னேகிடக்கும்படி மேற்பட்டநிலையிற் சென்றோனே.

52. கண் - அறிவு; லோகோபகாரத்திற்காகப் புத்தனெடுத்த அநேகம்பிறவிகளுள் ஒருபிறப்பில், அவன் கொடையைப் பரிசோதிக்கநினைந்த இந்திரன்வந்து இரண்டுகண்களையுங் கேட்டபொழுது அவன் அவற்றைக்கொடுத்தானென்பது புத்தஜாதககதைகளுள் ஒன்றாதலின், 'கண்பிறர்க்களிக்குங்கண்ணோய' என்பதற்கு இந்திரனுக்குக் கண்கொடுத்தோயே

ன்று பொருளகூறினுமபொருநதும; "பி ... வேண்டக,கண் ... புண்ணியனிரு ... போ , ... நாயகலியா யே" எ ... செயயுளாலுமுணர்க.

53. ... சாரகளைக கேளா ... அமமொழிளா வன பொய, ... கடுஞ்சொல, பய ... சொல்லனபன.

54. வாய்மொழி-உணமைமொழி.

55. நரகாகளிற சிலாகளுத துனப தைநீக்குமபொருடடு மணிமேகலை ஒ ... நரகலோகததிற்குச்செ னறுனெனபது வரலாறு, "அருவி னை சிலாகெ - வொருபெருநரகிடை, யெரிசுடா மணமல ரெம விடு மடியி னை" எனபதனுலுணாக

56. ... நாகாகளுரு கக்க கருடனாலுணடாம துனபம நீங்குமபொருட்டு அவாகளுக்கு தயா தருமததை உபதேசஞ்செயதது அவ னால் அவாகளுக்கு அமுதமகிடைக்கு மபடி செயதானென்பது புததசரிதக கதைகளுளொன்று; "மீதியல் கருட னை விடவர வொடுபயக வித்முறை கெடவறம வெளியுற வருளினை" என வும, "ஆரமிாத மணிநாகா குலமுயய வருளினையே, வாசிறைப்புள் ளரய றகு வாயமைநெறி பகாந்தனையே" எனவும வருவனவறறுலுணாக.

62 - 67. இவறறுற பசியாலுண் டாகும துன்பமும அதனை தீரபபோ ருடைய புகழின்பெருமையும கூறப் பெறறன. பசிபபிணியென்னும் பாவி யானது அழிக்கும, கொலலும, விடேட ம, களையும, சிதைககும, நிறுததுமெ ன்க.

62. (பசியானது) குடிபபிறப்பின் பெருமையயழிக்கும் விழுப்பங்கொ ல்லும - சிறபபினைவருததும.

63. கலவிப் பெருமபுணைவிடேம் - கல்வியாகிய பெரியதெப்பத்தைநீக கும.

64. நாண் அணி களையும - நாணு கிய ஆபரணததை நீககும.

67. இசை - கீரத்தி.

69. கௌசிகமுனிவர் - விசுவாமித் திரா.

69 - 75. விசுவாமித்திரமுனிவர் பசியின்கொடுமையால நாயூனதினப தறகு முயனறுரெனபதை மனுஸ்மிரு தி, க0-ம அததியாயம, கஅ-ம சுலோ கததிறகாண்க.

76. ஆறறுநா - செல்வா.

77. ஆறறுமாககள - வறியவா.

78. மேறறு - மேலது.

79. ஞாலம - பூமி.

96. அளவளாவிககொணடு - மன ஙகலநதுபேசிககொணடு.

106. அமுதசுரபி - அமுதமபோ னற வாஸனையையுடையது.

கஉ - ம் காதை.

4. உரைமூதாளன - முதிய உரை களை அளபவா, அறவணவடிகள.

15. மூனறுபநதிரஙகள - வொறரு அறியாமலடைவிபபது, அகாயததில் திரியச செயவது, பசியை நீககுவது.

38. துஷிதலோகம - தெயவலோ கம ஆறினுள நானகாவது.

41. புததஞாயிறு - புததனாகிய சூரி யன்.

இனிவருவன, புத்தன் அவதரிககு ஙகாலத்து உளவாகும நற்குறிகள.

42. தீஙகுஉறு விளஙக - விரோத மிலலாமல விளஙக.

46 வளி வலம கொட்கும - காறறு வலமாகச்சுழலும.

47. நனி-செறிவு. நலம்-வளஙகள.

48. கறவை - கறததலையுடைய பசு க்கள, கன்று ஆர்த்தி - கன்றை உண ணச்செயது, கலம நிறை பொழியும - கறவைக்கலமும அதனினின்றும பா லைச்சொரியும சாலும வழியுமபடி பா லைப்பொழியும.

49. துய்தது - அனுபவித்து.

50. வெருஉப் பகை - அஞ்சுதற் குக்காரணமாகிய பகை.

51. அருா - துன்பம. நரகச்சநதி யும பேய்ச்சாதியும அருளாகவைவிட் டொழியும.

52 - 53. கூன் - வளைந்தவடிவம். குறள் - குறுகியவடிவம. ஊம - ஊமை. மா - விலங்குவடிவம மருள் - அறிவின்றிமயங்கியிருப்பது. கூனமுதலிய வடிவங்களை உயிர்கள பெறமாட்டா. [இவை எணமெய்யெச்சத்தைச்சார்ந்தவை]

55. இன்னு - துனபம்.

56. போதிமூலம - அரசமரத்தின் அடி.

57. நாதன் - புத்தன்.

61. இருவா - மாதவி, சுதமதி.

68 - 69. ஓரறம பசிப்பிணிதீர்த்தலே. அவர் - அறவணவடிகள்.

கங - ம் காதை.

2. வாரணசி - காசி.

6 கருப்பிணி-கருபபமுடையவள்.

7. சூல் - கருபபம.

12. அகன் - அக்குழந்தையின்.

25. வெயதுயிர்தது - வெமமையாலழச்சைவிட்டு.

36. ஒறுகக - தணடிக்க.

42. விடுநிலம் - மேயதற்கு அரசனால்விடபபட்டநிலம; அது சோசருசாரபூமியென்று கூறபபடும. படுபுல்-தானே உணடாகுமடல்லை.

46. செறறம - கோபம.

50 அசலனென்பவா பசுவின்குமாரா சிருங்கி, மானினபுதலவா; சிருங்கம - கொமபு; அதனையுடையவர் சிருங்கி; இவா கலைகோட்டுமுனிவா.

55 ஆறிவோடு - பசுவால

72. திரிலோகதகாமயின்புத்திரர்கள வசிட்டருமஅகததியருமெனபது வைசனநூலவரலாறு.

80. சிந்தாதேவி - ஸரஸ்வதிதேவி. கலைநியமம - அந்ததேவியின கோயில.

85. பேறுநரில்லோா-கதியாறவா.

கச - ம் காதை.

6. ஆற்றல் - வன்மை.

8 இவ்வோடு - இந்த ஓடு.

14. நநதாவிளக்க்க - கெடாது தீபமபோல்வாய

16. ஏனோா - மற்றையோா.

50. மீகாமன் - மாலுமி.

கரு - ம் காதை.

12. குழவிபபருவம - குழந்தைப் பருவம.

19 - 20. கந்திற்பாவை - தூணிலுள்ளபிரதிமையை அதிட்டித்துநிற்குமதெயவம.

33. மிசசில - மிச்சு. ஒழிததுவைததாங்கு - பயன்படுத்தாமலவைததாறபோல

36. பிக்குணி - பிக்ஷுணி; தூரதோாகளில ஆணபாலாரைப பிக்ஷுக்களென்றும, பெணபாலாரைப் பிக்ஷுணிகளென்றும கூறுதல் பௌததசம்பிரதாயம

49 - 50 கறபு மழையைத்தருமென்பதை, "தெய்வந்தொழாஅள் கொழுநறறொழுதெழுவாள, பெயயெனப் பெயயு மழை" என்னும திருக்குறளாலுணர்க.

கசா - ம் காதை.

13. உடைய - உடைநதுபோக.

20. ஆகாயவாணி - ஆகாயவாக்கு; அசரீரி.

30. அபாசம - சோறவு.

37. குழிசி-பானை. முடைநாற்றம-புலால்நாறறம.

38. உணஙகல் - உலர்ந்தது.

39. எனகு - காடி; தனபிணவு - பெணகாடி.

40. பெணடு - மனைவி.

42. வயம - வசம.

52. கோறல் - கொல்லல்.

53. கயக்கு - கசங்குதல்.

57. அல்லறம - பாவம; அறமல்லாததெனறபடி.

64. துகில - ஆடை.

70 பிச்சைவாஙகுமபொழுது மௌனமாகநிற்கவேண்டுமெனபது பௌசசநூலவிதி. அது, வாயவாளாமையெனக் கூறபபடும.

72 சுனா - பன்றி, நட்டுவா.

73. பசியாகியபிணி

74. ஆர் உயிாமருந்து - அரியசோறு

கஎ - ம் காதை.

3. அரசுமுறை நாட்டிய - நிலைபெறவே சமபாதித்த.

3 - 4. அறவோன் திறத்து - புண்ணியமுடையவனிடத்தே, வழிபடுதேம - பெருந்தேறும.

8. அனனாய் - அன்னையே.

18. பாரணம - உணவு; விரதத்தார பட்டினியிருந்து உணணும உணவு.

21. சிறைத்த - அழித்த.

30. யானைத்தீயெனனுமநோய பஸ்மகவியாதியெனறு கூறபபடும.

37. அநதரம - ஆகாயம.

40. அறமாககள - ஏழைகள்.

47. மணிமேகலை, விளி. படர்கேன் - செலவேன.

52. உழந்தோர - வருந்தினேர்.

53 அருமபிணி - நீர்த்தறகரிய வியாதி.

54. இடுவோர் - கொடுப்போனர.

60. வெயகதிகானம - மூஙகில்கரிநதகாடு.

61. கருவி - தொகுதி; மின்னல், இடிமுதலியன.

62. பைதல - துன்பம்.

கஅ - ம் காதை.

7. தாபதககோலம - தவமுடையவாகளின்வேடம்.

9 பாணன - பாணச்சாதியிறபிறந்தவன்; யாழவாசித்தல் அச்சாதித தொழில.

11. நறந்தாது - நல்லதேன். நயன் - செல்வம.

16. பிசசைமாக்களாகிய பிறருடைய.

19 - 21. பாதத்தையரிற் குடிகளுற்றப்பட்டார்தலையில் எழுசெஙகலைச் சுமத்தி அரஙகைச்சூழவிததுப் புறத்தேவிடுத்தல் மரபு.

24. அரண்மனை - காவலையுடைய வீடு.

37 இடும்பை கொள்கலம - (மணிமேகலையான்து) துனபத்திற்குப்பாத்திரம கலனானது.

51. பாடுகிடப்பேன் - வரஙகிடப்பேன்.

53. 'திருவடிதொட்டேன்' என்றது, சூளுறவு.

ககூ - ம் காதை.

[சிறைக்கோட்டம - சிறைச்சாலை; அறககோட்டம் - தருமசாலை.]

3 வஞசினம - சபதம.

28. இராசமாதேவி - மாவண்கிள்ளியினபட்டமகிஷி.

30. மாவணகிள்ளி - அக்காலத்திருந்தசோழராஜன.

31. ஒளி - உறஙகாநிறகவும உலகஙகாக்கின்ற அரசரிடத்துள்ள கடவுட்டனமை.

35. சிறைக்கோட்டம் - சிறைச்சாலை.

46. விஞ்சைமகள் - விததையையுடையபெண், விததியாதரசாதிமஙகை; சிலேடை.

51. மிருதசஞ்சீவினி - மரித்த உயிரை மீட்டும உடமபிற்சேர்க்கும பச்சிலை.

53. அறச்சாலை - தருமசாலை.

உ௦ - ம் காதை.

6. முதுமொழி-பழையவார்த்தை.

15 பூதசதுக்கம - பூதமதஙகிய நாற்சந்தி. இப்பூதந்தான சதுக்கப்பூதமெனறு கூறபபடும.

39. சாநது - சநதனககுழம்பு. மறைத்து யாதது - மறைததுக்கட்டி.

40. தூசு - ஆடை. மணி இரததினம்; அணியெனக்கொணடால, ஆபரணமெனக்கொள்க.

41. வஞசம - வஞசனை.

46 காதற்குறிப்பு-ஆசைக்குறிப்பு. புலப்படுத்தி - வெளிபபடுத்தி.

50 தீது - கொலை.

52. வேட்கை - ஆசை.

57 - 58. நடுயாமம-பாதிராத்திரி.

64. வேகவெந்தீ - விஷம்.

65 போரயா - மிக்குயர்நத. புறத்தளை - புறறின் துவாரம.

77. ஆகாயசாரிகள - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் தேவகணஙகள்.

உக-ம். காதை.

7. ஆற்றாது - ஸகியாமல்.

15. சால்பு - அமைதி. மறம் - பாவம்

16 இடர்வினை - துன்பத்தைவிளைவிக்கும் பாவத்தை.

26. மகன் - கணவனாக.

27. மகளாயதூஉம் - மனைவியாகியதும்.

29 காரிகை, விளி.

39. அடிச்சிக்கு - அடியவளாகிய எனக்கு.

46. அடிசில் - அன்னம். மடையன் - சமையற்காரன்.

48. பாணித்து - தாமதித்து.

49. வழுக்குற்று - வழுக்கி. மடைக்கலம் - அன்னம்வைத்திருக்கும் பாத்திரம்.

52. தாழ்த்தான் - தாமதித்தான்.

62. வேண்டுகோள் - பிரார்த்தனை.

68. வஞ்சி - சேரராசனுடைய இராசதானி.

71. வாயே - உண்மையே. மயக்கு ஒழி - மயக்கத்தை ஒழிவாயாக.

75. படிமம் - பூசித்தற்குரிய தெய்வவடிவம்.

88. சார்பிற்றோற்றம் - துவாதச நிதானம்; உசு-ம் காதை, 37 - 38-ம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

89. பவம் அறு மார்க்கம் - பிறவியொழிதற்கு ஏதுவாகிய நல்வழி.

90. மற இருள் - பாவமாகிய இருட்டு. ஏம உற - இன்பமுற.

91. அறவெயில் - புண்ணியமாகிய வெயிலை. இருத்தி - ஸித்தி.

95. பிழையாமல் - தப்பாமல்.

101. நிருவாணம் - முத்தி.

உஉ-ம் காதை.

12. விகாரம் - வேறுபாடு.

13. வன்மை - பலாத்காரம். ஒறுக்கப்பட்டு - தண்டிக்கப்பட்டு.

21. காவற்கணிகை - காவலையுடையபரத்தை.

28. *காவிரிப்பூம்பட்டினத்திற்குக் காகந்தியென்றும் பெயருண்டென்பது கைலாயநிகண்டாலும் தெரிகின்றது.

34. காவிரிவாயில் - காவிரிக்குச்செல்லும்வழி.

38. அந்தணனுடைய - கணவனுடைய; கணவனுடையபெயரைச் சொல்லலாகாதென்பதுவிதி.

39. முத்தீ - ஆகவனீயம், காருகபத்யம், தக்ஷிணாக்கினி.

41. சதுக்கப்பூதம் ஐவகையாகிய பெருங்குற்றஞ்செய்தவர்களைக் கொல்லும் இயல்புடையதாகலின், இவள் பூதச்சதுக்கமென்றனள்.

48. அவலித்து - சோர்வுற்று.

35 - 48. மருதி தன்குற்றத்தைத் தான் நினைந்துவருந்திய அருமை மிக ஆராயத்தற்பாலது.

51 - 52. "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை" என்பது, திருக்குறள், 55.

53. பொய்யில்புலவன் - திருவள்ளுவர். பொருளுரை - தருமவார்த்தை.

55. நிருத்தம் - நடனம். கீதம் - இசைப்பாட்டு.

60. வெற்றுச்செய்கை - வீண்செய்கை.

75. காந்தருவமணம் - கந்தருவவிவாகம்; அது தலைவன் தலைவிகள் தம்முள் மனமொத்துச்சேர்வது.

84. மைத்துனனென்றது தருமதத்தனை.

92. ஈட்டி - சம்பாதித்து.

93. எட்டிப்பூ - எட்டிப்பட்டத்திற்குரிய பொற்பூ.

98. தாழ்த்தல் - தாமதித்தல். [கம்.

111. புத்தேளுலகம் - தெய்வலோ

112 விழுத்துணை - சிறந்ததுணை; "தெரியி னறமே துணை" என்பது அறநெறிச்சாரம்.

130. முடிபொருள் - முடிந்தபொருள்; பரமார்த்தம்.

133. காமமானது, மேற்கூறிய கட்குடித்தல் முதலியவற்றைத் தள்ளாததாகும்.

137. உழப்போர் - வருந்துவோர்.
141. சிறுவில - சிறுவீடு. பேரில - பெருவீடு.
152. முறுகிய - மிகுந்த.
161 அரசாபிரான - மனுநீதிச் சோழர். இவர் மகன்மீது தேரையூர்ந்த வரலாற்றைப் பெரியபுராணம் திருவாரூர்ச்சிறப்பாலுணர்க.
163. பரங்காடு - சுடுகாடு.

௨௩ - ம் காதை

4 கட்டுரை - பொருள்பொதிந்த சொல்.
25 தீச்செயற்கு - கொடுஞ்செய்கைக்கு.
28. வேற்றுரு - வேறுவடிவம்.
30. அறிவிலி - அறிவில்லாதவன்
37 பழுக்கறை - புழுங்குதற்குக் காரணமாகிய அறை; வாயிலில்லாத அறை
48. இளங்கோன் - இளவரசன்; உதயகுமாரன்
53. புக்கில் - புகுந்தவீடு
54 செயப்பாட்டுவினை செய்யப்படுதலையுடைய வினை.
68 - 69 கல்லாக்கயவன் - படியாத கீழ்மகன்
81. செற்றம் செறுத்தோர் - தணியாத கோபத்தை அடக்கினவர்கள்
83 அல்லல் மாக்கள் - வறுமைத்துன்பமுடைய மனிதர்.
88 நன்கனம் - நன்கு

௨௪ - ம் காதை

21 அடிகள் - ஸ்வாமியாகியநீர்
26 பீலிவளையென்பவளின்சரிதை, சேறைக்கவிராஜபிள்ளை இயற்றிய செய்யூநுலாவிலும் வந்துள்ளது.
31. கவலாது - கவலையடையாமல்.
40 தன்னுடைய பெயரைப்பெற்ற மடந்தை - மணிமேகலை
47 உரவோர் துறந்தவை - அறிவுடையோரால் நீக்கப்பட்ட குற்றங்கள்.
61. நாத்தொலைவு - நாவின்மெலிவு
82. கவலற்க - கவலையடையாதொழிக.

௨௫ - ம் காதை

4 மறம் - பாவம். அநித்தம் - அநித்தப்பொருளின்வகை.
4, 5. நித்தத்திறம் - நித்தப்பொருளின்வகை. துக்கம் - பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, விரும்பியனபெறாமை, வேண்டாதனபெறுதலென்பன ஆறும்
6 சார்பிற்றோற்றம் - பேதைமை முதலியவற்றின் உற்பத்தி. உய்தி - பிழைத்தல்
7 அரியன் - ஆசிரியன்; என்றது புத்ததேவனை
10 பிரசானி - இராஜகாரியத்தில் முதன்மைபெற்றவன்
41. மன்னுயிர்முதல்வன் - புத்ததேவன். அறம் - அவன்கூறிய தர்மம்
46 நாவாய் - கப்பல். [ன
70 கொலைவன் - கொலைசெய்பவ
68 - 70 இவ்வாறிரக்கூறியவை வஞ்சப்புகழ்ச்சியணி.
75 - 76 கம்பளச்செட்டி - கம்பளவாணிகஞ்செய்யும் வியாபாரி.

௨௬ - ம் காதை

2 வஞ்சிநகரத்தில், சேரன்செங்குட்டுவன் கண்ணகிக்குக்கோயில் கட்டுவித்து வருடந்தோறும் திருவிழா நடப்பித்தானென்பது சிலப்பதிகாரத்துள்ளவரலாறு
5 கைம்மைநோன்பு - வைதவ்ய விரதம்
18 வேலை - உத்தியோகம்
19 ஒற்றன் - ஒற்றியொற்றி, நடப்பவைகளை அறிபவன், வேவுகாரன்
28 நுகர்ந்து - அனுபவித்து
36 கபிலையம்பதி - கபிலவாஸ்து; கபிலரென்பவர் தவஞ்செய்த இடமாகஇருந்ததென்பது பொருள்
37. நால்வகைச்சத்தியம் - துக்கம், துக்கோத்பத்தி, துக்கநிவாரணம், துக்கநிவாரணமார்க்கம்
37 - 38 பன்னிரண்டுசார்புகள் - பேதைமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட

கை, பற்று, பவம், தோற்றம், வினைப் பயனென்பன; இப்பன்னிரண்டின் இலக்கணமுதலியவற்றை, இதன்முத னூலாகிய மணிமேகலையின், ௩௦ - ம் காதை, ருக-ம் அடிமுதலியவற்றாலும் அவற்றின் உரையாலும் உணர்க.

42. புத்தசைத்தியம் - புத்தாலயம்.

42 - 43. இந்திரவிகாரம் ஏழு - காவிரிப்பூம்பட்டினத்தில், இந்திரனால் நிருமிக்கப்பட்ட எழுரங்குகள்; இவற்றைக் கோவலனும் கண்ணகியும் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து மதுரைக்குச்செல்லும்பொழுது வணங்கினார்கள்; [சிலப். நாடுகாண். கச-கரு-ம் அடிகளைப்பார்க்க].

52. தேவகுலம் - தேவாலயம். தெற்றி - திண்ணை. பள்ளி - சாலை.

55. காணிய - கண்ட.

உஎ - ம் காதை.

3. அளவைவாதி - பிரமாணவாதி; பிரமாணம் - காட்சிமுதலியன.

7. நிகண்டவாதம் - சைனஸமயத்தைச்சார்ந்த ஒருவகைவாதம், இது நிர்க்கந்தவாதமென்றும் திகம்பரவாதமென்றும் கூறப்படும்.

உஅ - ம் காதை

7. மாசாத்துவான் - கோவலனுடைய தந்தை.

38. அறத்தகைமுதல்வன் - புத்ததேவன்.

39. இறைவன் - இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனென்னுமரசன்.

42. பாங்கன் - தோழன்.

48. சைத்தியம் - புத்தாலயம்.

52. உன்தந்தையென்றது, கோவலனை.

83. கோடியோ-கோணுதலுற்றோ.

86. அலத்தற்காலை - வறுமைக்காலம்; அலத்தல் - வாடுதல்.

94 வறம் - வறுமை.

111. மூவறுபாஷை - பதினெட்டுப்பாஷை.

113. பேணுமாக்கள் - பாதுகாக்கப்படாதவர்கள்; கதியற்றவர்.

114. படிவநோன்பியர் - தவவேடத்தையும் நோன்பையுமுடையவர்கள்.

115. மடி - ஆடை, சோமபல்.

124. போனகம் - உணவு.

உகூ - ம் காதை.

17. சரண - அடைக்கலம்.

19. அளவைகள் - பிரமாணங்கள்.

௩௦ - ம் காதை.

3, 4. 'புத்தம் சரணங்கச்சாமி' என்பது முதலியமூன்றும் பௌத்தர்களுள் மூன்றுமந்திரங்களாக வழங்கும். இவற்றிற்குப்பொருள் முறையே, புத்தனைச் சரணமாக அடைகிறேன், தாமத்தைச் சரணமாக அடைகிறேன், ஸங்கத்தைச் சரணமாக அடைகிறேனென்பன.

5. மும்மணி - புத்தன், தாமம், சங்கம்.

9 துடிதலோகம் - துஷிதலோகம்.

13-14. கௌதமபுத்தருக்கு முன்பு அளவிறந்த புத்தர்கள் பிறந்து பௌத்ததருமங்களை ஸ்தாபனஞ்செய்தாரென்பது புத்தஜாதககதைகளிற்கண்ட வரலாறு.

19. திரிபு - ஒன்றைமற்றொன்றாகக்கருதுவது

19 - 20. அந்நகரில் - காஞ்சியில்.

# அபிதானவிளக்கம்.

[அபிதானம் - பெயர்.]

அகத்தியன் : ஒரு தெய்வமுனிவர்.

அங்கநாடு : துச்சயனென்னும் அரசனுடையது.

அசலன் : பசுவயிற்றிற்பிறந்த ஒரு முனிவன்.

அசோதரம் : இரவிவன்மனென்னும் அரசனுடைய நகரம்.

அத்திபதி : நீலபதிகணவன், இராகுலனுடையதந்தை. இவனுடைய இராசதானி இடவயமென்பது.

அபஞ்சிகன் : காசியிலுள்ள ஓரந்தணன்; சாலியென்பவளுடைய கணவன்.

அமரசுந்தரி : பூமிசந்திரனுடைய மனைவி; புண்ணியராசனை வளர்த்தவள்.

அமுதசுரபி : தென்மதுரையிற் கலாநியமத்துள்ள சிந்தாதேவியால் ஆபுத்திரனுக்குக் கொடுக்கப்பட்ட தெய்வத்தன்மையுள்ள ஒரு பாத்திரம்; இது, தன்னுட்பெய்த அன்னத்தை எடுக்க எடுக்கக் குறையாது மேன்மேலும் வளரச்செய்வது.

அமுதபதி : இரவிவன்மனென்னும் அரசன்மனைவி; இவள், தாரை, வீரை, இலக்குமி என்பவரைப்பெற்றவள்.

அறவணவடிகள் : காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த புத்தசங்கத்துள்ள ஒரு முனிவர்; கோவலன் கொலையுண்டது கேட்டுவருந்தியடைந்த மாதவிக்குத் தருமோபதேசஞ்செய்து துன்பகற்றித் துறவுபூணச்செய்தவர்; பாதபங்கயமலையைத் தாம்தரிசித்ததன்றித் துச்சயனென்னும் அரசனையும் மனைவியரோடுசென்று அதனைத்தரிசிக்கும்படி செய்தவர்; மணிமேகலைக்கு ஆபுத்திரன்வரலாற்றையும், அமுதசுரபியின் பெருமையையும், உணவளித்தலின் விசேடத்தையும் கூறிப் பலருடைய பசித்துன்பங்களையும் போக்கும்படிசெய்ததன்றி, தருமோபதேசஞ்செய்து, அவளை நல்வழிப்படுத்திய ஆசிரியர் இவரே; தீவதிலகையாலும் கந்திற்பாவைதெய்வத்தாலும் நிரம்பப்புகழப்பெற்றவர்; காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல்கொண்டபின்பு வஞ்சிநகரையடைந்து அங்கே துறவுபூண்டிருந்த கோவலன்றந்தையோடு அளவளாவி அப்பாற் காஞ்சிநகரஞ்சென்று அங்கே தவம்புரிந்திருந்தார். இவர், மிக்க மூப்புற்றும் சிறிதும் சொல்வன்மை குன்றாதிருந்தவர்.

ஆதிரை : சாதுவன்மனைவி; இவள், ஒப்புயர்வில்லாக்கற்பினள்.

ஆபுத்திரன் : சாலியின்புதல்வன்; பிறந்தநாள் தொடங்கி ஏழுநாளளவும் ஒருபசு பாலூட்டிவளர்க்க வளர்ந்தமையால், இவன் இப்பெயர்பெற்றான்; அன்பும் அருளுமுடையவன்.

இடவயம் : அத்திபதியென்னும் அரசனுடைய நகரம்.

இரத்தினதீவம் : மணிபல்லவத்தின் அயலிலுள்ள ஒரு சிறுதீவு; இலங்காதீவமென்றுங் கூறப்படும்; இதில், புத்ததேவரது பாதப்படிமையமைக்கப்பெற்ற உச்சியையுடையமலையொன்று உண்டு.

இரவிவன்மன் : அசோதர நகரத்து அரசன்; அமுதபதியின் கணவன்; இலக்குமியின் தந்தை.

இராகுலன் : அத்திபதியென்னும் அரசனுக்கு நீலபதிவயிற்றிற் பிறந்தவன்; இலக்குமியின் கணவன்; திட்டிவிடமென்னும் பாம்பாலிறந்து பின்பு

உதயகுமரனாகப் பிறந்தவன் இவனே.

இலக்குமி: இரவிவன்மனுக்கு அமுதபதிவயிற்றிற் பிறந்தவள்; தாரை, வீரை என்பவர்களின் தங்கை; இராகுலனுடைய மனைவி; திட்டிவிடத்தாற் கணவனிறந்தவுடன் தீப்பாய்ந்து உயிரை நீத்தவள்; சாதுசக்கரனென்னும் முனிவனுக்கு உணவளித்த புண்ணியத்தால் மணிமேகலையாகவந்து பிறந்து பௌத்ததருமங்கேட்டவள் இவளே.

இலங்காதீவம்: இரத்தினதீவமென்னும் பெயரைப்பார்க்க.

உதயகுமரன்: காவிரிப்பூம்பட்டினத்தரசனாகிய நெடுமுடிக் கிள்ளியின் புதல்வன்; மணிமேகலைபால் விருப்புற்றுப் பலமுறை அவளிடஞ்சென்று இரந்து பின்னின்றவன். இவன் பெயர் இளங்கோனெனவும் வழங்கும்.

உலகவறவி: காவிரிப்பூம் பட்டினத்திற் சக்கரவாளக்கோட்டத்துள்ள சம்பாபதி கோயிலின்முன்பமைந்த ஊரம்பலம்.

எட்டிகுமரன்: காவிரிப்பூம் பட்டினத்துள்ள ஒருவணிகன்.

ககந்தன்: காந்தனென்னும் சோழராசனுடையகாவற்கணிகையின் புதல்வன்.

கச்சயம்: துச்சயராசனுடைய இராசதானி.

கண்ணகி: கோவலன்மனைவி; இவளது கற்புமுதலியவற்றை வெளிப்படுத்தற் பொருட்டே சிலப்பதிகாரம் செய்யப்பட்டது.

கந்திற்பாவை: சக்கரவாளக் கோட்டத்திற் சம்பாபதிகோயிலின்கிழக்கேயுள்ளதூணில் மயனால் நிருமிக்கப்பட்ட ஒருபிரதிமை; துவதிகனென்னுந் தேவனுடைய வடிவமாகவுள்ளது.

கபிலை: இப்பெயருள்ள நகரம் இரண்டு: க - கலிங்கநாட்டிலுள்ளது; கு[redacted] அரசனுடைய இராசதானி. உ - மகதநாட்டிலுள்ளது; கபிலவாஸ்துவென்றுகூறப்படுவது இதுவே; இந்நகரிலேதான் கௌதமபுத்தர் அவதரித்தனர்.

கம்பளச்செட்டி: ஒரு வணிகன்; கம்பளவியாபாரஞ்செய்பவன்.

கரிகால்வளவன்: காவிரிப்பூம்பட்டினத்தை ஆண்ட ஒரு சோழன்.

கலிங்கநாடு: தாயமன்னவராகிய வசு, குமரனென்னும் இருவர்க்குரியது.

கலைநியமம்: தென்மதுரையிலுள்ள சிந்தாதேவியின் கோயில்; கலை - வித்தை.

கவேரவனம் - காவேரியின் தந்தையாகிய கவேரரெனபவர் தவஞ்செய்துகொண்டிருந்தவனம்.

கவேரன்: ஓர் இராசருஷி.

காகந்தி: காவிரிப்பூம்பட்டினம்.

காஞ்சனபுரம்: வித்தியாதர நகரங்களுள் ஒன்று.

காஞ்சனன்: ஒருவித்தியாதரன்; காயசண்டிகையின் கணவன்; உதயகுமரனைக் காயசண்டிகையின் சோரநாயகனென்று நினைந்து அவனை வாளால் வெட்டிவீழ்த்தினவன்.

காஞ்சி: ஒருநகரம். இதில், கந்திற்பாவைதெய்வமும் துணையிளங்கிள்ளியென்பவனாற் கட்டப்பட்டுள்ள புத்தாலயமொன்றும் தென்மேற்கில் தருமதவனமென்று பெயருள்ள ஒரு சோலையுமிருந்தன.

காந்தன்: ஒருசோழன்; அகத்திய முனிவர்பால்மிக்க பக்தியையுடையவன்; இவன் வேண்டுகோளாலேதான் காவிரியை அவர் பெருகச்செய்தனர்.

காந்தாரம்: பெரியதொருநாடு.

காயங்கரை: ஒருநதி.

காயசண்டிகை: ஒரு வித்தியாதர மங்கை; காஞ்சனன்மனைவி.

காலவேகம்: ஒருயானை.

காவிரிப்பூம்பட்டினம்: சோழர்களுடைய பழைய இராசதானி.

கிள்ளிவளவன்: ஒருசோழன்.

குமரன்: கலிங்கநாட்டுள்ள கபிலை நகரத்தரசன்.

குமரி: கன்னியாகுமரியென்னும் நதி.

கேசகம்பளர்: நரியயிற்றிற்பிறந்த ஒருமுனிவர்.

கொற்கை: பாண்டியர்களின் பழைய இராசதானி.

கோதமை: ஒரு பார்ப்பனி; சாரங்கலன் என்பவனுடைய தாய்.

கோமுகி: மணிபல்லவத்துள்ள தோர்பொய்கை.

கோவலன்: இப்பெயரையுடையவர் இருவர்; அவருள், ஒருவன், மணிமேகலையின் தந்தை; கண்ணகியின் கணவன்; சிலப்பதிகாரக்கதாநாயகன்; மற்றொருவன், மேற்கூறியகோவலனுக்கு ஒன்பதுதலைமுறை முன்னோன்.

கௌசிகன்: சண்பை நகரத்துள்ள ஓரந்தணன்.

சக்கரவாளக் கோட்டம்: புத்திர சோகத்தால்வருந்திய கோதமையின் துன்பத்தைப்போக்குதற்காக இவ்வுலகத்திலுள்ள எல்லாத தேவர்களையும் சம்பாபதிவருவித்துக் காட்டியவிடத்து அக்காட்சியை எக்காலத்தும யாவரும் காணும்வண்ணம மயனால் நிருமிக்கப்பட்டது; இது காவிரிப்பூம்பட்டினத்துள்ளது; இதில முனிவர் பலரிருந்து தவஞ்செய்தார்.

சங்கதருமன்: ஒரு பௌத்தமுனிவர்; சுதமதிக்கும, அவள் தந்தைக்கும் தருமோபதேசஞ்செய்தவர்.

சங்கமன்: ஒருவணிகன்; நீலியின் கணவன்.

சண்பை: கடலோரத்துள்ள ஒரு நகரம்.

சந்திரதத்தன்: கப்பலிற்சென்று வாணிகஞ்செய்யும ஒருவணிகன்.

சம்பாதி: ஒருபறவை.

சம்பாதிவனம் - காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஒருசோலை.

சம்பாபதி: சம்புத்தீவின் அதிதேவதை; சிவந்தநிறமும சடையும் உடையவள்.

சமந்தம்: சமந்தகூடமென்னுமலை; இலங்கையிலுள்ளது. இதன் உச்சியில் புத்தனுடைய பாதப்படிமைப்பீடமுண்டு.

சமனொளி: சமந்தகூடம்.

சனமித்திரன்: புண்ணியராசனுடைய மந்திரிகளுள் ஒருவன்.

சாதுசக்கரன்: ஒரு முனிவன்; ஆகாயகமனமுடையவன்; தன்முற்பிறப்பில இவனை ஒருபொழுது உணவித்த புண்ணியமே மணிமேகலை நலவழிப்படுதற்கு ஏதுவாயிற்று.

சாதுவன்: ஆதிரையின்கணவன்; நாகமலைக்கும், அவர்கள் குருமகனுக்கும், சிலநீதிகள்கூறி அவர்களை நல்வழிப்படுத்தியவன்.

சாரங்கலன்: கோதமையின்புதல்வன்; இவன், மயானத்திற் பேய்மகளாடியதைக்கண்டு அஞ்சி உயிரை இழந்தவன்.

சாலி - ஒருபார்ப்பனி; அபஞ்சிகன் மனைவி; ஆபுத்திரனுடையதாய்.

சாவகம்: ஆபுத்திரனுடைய நாடு; இதன் தலைநகர் நாகபுரம; இதில் தவளமலையென்று பெயர்பெற்ற ஒருமலையுண்டு.

சிங்கபுரம் கலிங்கநாட்டிலுள்ள ஒருநகரம்.

சித்திபுரம்: சீதரராசனுடையநகர்.

சித்திராபதி: மாதவியினற்றாய்; மணிமேகலையை உதயகுமரனோடு கூட்டுதற்குப் பலவகையாக முயன்றவள்; மிக்கவிரகுள்ளவள்.

சிந்தாதேவி: ஸரஸ்வதிதேவி; தென்மதுரையில் இவளுக்குக் கலாநியமமென்று பெயர்பெற்ற ஆலயமொன்றிருந்தது.

சிருங்கி: மானவயிற்றிற்பிறந்த ஒருமுனிவர்.

சீதரன்: சித்திபுரத்து அரசன்; நீலபதிதந்தை.

சீர்த்தி: மாவலிபரம்பரையிலுதித்த ஓரரசன்புத்திரி; நெடுமுடிக்கிள்ளியின்மனைவி; உதயகுமரனுடையதாய்;

சுதமதி. கௌசிகனென்னும அந்தணனுடையபுத்திரி; மாதவியின் உயிர்த்தோழி; மணிமேகலைபால் மிக்க அன்புடையவள்.

செங்குட்டுவன்: சேரலாதன் புத்திரன்; இளங்கோவடிகளின் தமையன்.

சோழன்கரிகாற் பெருவளத்தான் காவிரிப்பூம்பட்டினத்து அரசன்.

தருமசாவகன்: ஒரு பௌத்தமுனிவன்; புண்ணியராசனுக்குத் தருமோபதேசஞ்செய்தவன்.

தருமதத்தன்: காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஒருவணிகன்; மரிக்கும்வரையிற் கலியாணமின்றியிருந்தவன்.

தருமதவனம்: காஞ்சிநகரத்திலுள்ள ஒருசோலை.

தவளமலை: சாவகநாட்டிலுள்ளது.

தாரை: இரவிவன்மன்புத்திரி; துச்சயராசன்மனைவி; வீரை, இலக்குமியென்பவரின் தமக்கை.

திட்டிவிடம்: கண்ணில்விடமுடையதோராபாம்பு; இஃது அழற்கணாகம், நஞ்சுவிழியரவெனவும் வழங்கும்.

தீவதிலகை: மணிபல்லவத்துள்ள புத்தபீடிகையை இந்திரன்கட்டளைப்படி பாதுகாக்கும் ஒருதெய்வமங்கை; புண்ணியராசனுடைய பூர்வஜன்மசரீரம் மணலிற்புதைந்துகிடந்ததை அவனுக்குக்காட்டியவள்.

துச்சயன்: கச்சயநகரத்து அரசன்; தாரை, வீரை என்பவர்களின் கணவன்.

துடிதலோகம்: துஷிதலோகமெனவழங்கும்; உலகம் முப்பத்தொன்றனுள் ஒன்பதாவது; மஹாராஜிகலோகமுதலிய தெய்வலோகம் ஆறனுள் நான்காவது. இதிலுள்ள பிரபாபாலனென்னுந் தேவனே புத்தனாக அவதரித்தானென்பர்.

துணையிளங்கிள்ளி: காஞ்சிநகரத்திருந்த ஒருசோழன்.

துவதிகன்: ஒருதேவன்; சித்திரசேனனுக்கு நண்பன்; காவிரிப்பூம்பட்டினத்திருந்த கந்திற்பாவையை அதிட்டித்திருந்து முக்காலச்செய்தியையுங் கூறிவந்தவன்.

தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியன்: காவிரிப்பூம்பட்டினத்தில் அகத்தியமுனிவருடைய கட்டளையின்படி முதலில் இந்திரவிழா எடுப்பித்த ஒருசோழன்.

தொடுகழற்கிள்ளி: காஞ்சிநகரத்திருந்த ஒருசோழன்; துணையிளங்கிள்ளியின் தமையன்.

நாகபுரம்: புண்ணியராசனுடைய இராஜதானி.

நாகர்: ஒருவகைமனிதர்.

நீலபதி: சீதரனென்னும் அரசன் புத்திரி; அத்திபதியின் மனைவி; இராகுலனுடைய தாய்.

நெடுஞ்செழியன்: ஒருபாண்டியன்; சிலம்புகாரணமாகக் கோவலனைக்கொல்வித்தவன்.

நெடுமுடிக்கிள்ளி: ஒருசோழன்.

பரசுராமன்: திருமாலின் அவதாரமூர்த்திகளுள் ஒருவர்.

பாதன்: சிங்கபுரத்து அரசனாகிய வசு என்பவனுடைய வேலைக்காரன்.

பாதபங்கயமலை: மகததேசத்தின் இராசதானியாயிருந்த இராசக்ருகநகரத்தின் சமீபத்திலுள்ள ஒருமலை. புத்ததேவன் எல்லாவுயிர்களுக்கும் தருமசிந்தையை யுண்டாக்கநினைந்து அவைகளெல்லாம் தன்னைக்கண்டு கேட்கும்படி இதன்மேல்நின்று தருமோபதேசஞ்செய்தபொழுது அவன் பாதச்சுவடுதங்கப்பெற்றமையின், இஃது இப்பெயர்பெற்றது; இது கிருத்திரகூடமென்றும் கூறப்படும்.

பிரமதருமன்: ஒருபௌத்தமுனிவன்; அத்திபதியின் மைத்துனன்.

பீலிவளை: வளைவணனென்னும் அரசனுடையமகள்.

புண்ணியராசன்: நாகபுரத்தரசன்.

பூதசதுக்கம்: தவவேடத்தில்மறைந்து தீமைபுரிந்தொழுகுவோர்முதலிய அறுவகைப்பாவியரைப் புடைத்துண்ணும் பூதம்நிற்றலையுடைய நாற்சந்தி.

பூதி: ஆபுத்திரனைவளர்த்தவன்.

பூமிசந்திரன்: நாகபுரத்து அரசன்; அமரசுந்தரியின் கணவன்; புண்ணியராசனை வளர்த்தவன்.

பூருவதேசம்: அத்திபதியின்நாடு;

பொதியில்: பாண்டியநாட்டிலுள்ள மகத்ம ஒருமலை. [ஒருமலை.

மண்முகன்: தவளமலையிலிருந்து தவஞ்செய்த ஒருமுனிவன். இம்முனிவனிடத்திருந்த பசுவயிற்றிலே தான் புண்ணியராசன் பிறந்தான்.

மணிபல்லவம்: காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தெற்கே முப்பதுயோசனையளவிலுள்ள ஒருசிறுதீவு.

மணிமேகலாதெய்வம்: சிலதீவிலுள்ளவரை, அரக்கர் வாதைபண்ணாதபடி இந்திரனேவலாற் பாதுகாத்துக் கொண்டிருத்தலையுடைய ஒரு தெய்வம். கோவலன் தன்குலத்தோனொருவனை இத்தெய்வம், கடலிற்பாதுகாத்த நன்றிபாராட்டியே தன் காதற்பரத்தையின் புதல்விக்கு மணிமேகலையென்று பெயரிட்டான்.

மணிமேகலை: கோவலனுக்கு மாதவியாற்பிறந்தவள்; இக்கதைத்தலைவி.

மதுராபதி: தென்மதுரையின் அதிதேவதை.

மருதி: காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஒருபார்ப்பனி.

மாசாத்துவான்-கோவலன்தந்தை.

மாதவி: ஒருநாடகக்கணிகை; கோவலனுடைய காதற்பரத்தையாயிருந்து மணிமேகலையைப்பெறறவள்; கோவலன் கொலையுண்டதுகேட்டுத் துறந்து அறவணவடிகள்பால் தருமங்கேட்டு அவருடன் காஞ்சிசென்று நோற்றிருந்தவள்.

மாரன் தருமவிரோதிகளான இச்சைகளை மனத்திலுண்டாக்கும் ஒரு தேவன்.

மாருதவேகன்: ஒருவித்தியாதரன்.

மாவணகிள்ளி: ஒருசோழன்.

முசுகுந்தன்: சூரியகுலத்திற்பிறந்த ஒருசக்கரவர்த்தி. இவன் முன்பு காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அரசாளுடையவன்.

வச்சிரக்கோட்டம்: வச்சிராயுதம் நிற்கும்கோயில்; இது காவிரிப்பூம்பட்டினத்திலிருந்தது.

வசு: சிங்கபுரத்தரசன்.

வஞ்சி: சேரராசதானி.

வயந்தமாலை: மாதவியின்தோழி.

வயனங்கோடு: பாணடிநாட்டிள்ள ஓரூர்.

வளைவணன்: நாகநாட்டரசன்; வாசமயிலையின்கணவன்; பீலிவளையின் தந்தை.

வாசந்தவை: ஒருமுதியவள்; இவள், சோழன்மனைவி முதலியவர்க்குப் பலநீதிமொழிகள் கூறியவள்.

வாசமயிலை: வளைவணன்மனைவி; பீலிவளையின்தாய்.

வாரணசி: காசி.

விசாகை: ஒருவணிகமாது; மரணபரியந்தம் விவாகமின்றிக் கன்னிமாடத்தேயிருந்து காலங்கழித்தவள்.

விந்தம: ஒருமலை.

விந்தாகடிகை: ஒருதெய்வப்பெண்; விந்தமலையில் துர்க்கைகோயிலைக்காப்பவள்.

விரிஞ்சி: புலிவயிற்றிற்பிறந்த ஒருமுனிவன்.

விருச்சிகன்: பொதியின்மலைச்சாரலில் தவஞ்செய்துகொண்டிருந்த ஒருமுனிவர்; கஉ - வருடத்திற்கு ஒருமுறையுண்ணும் பட்டினி விரதி.

வீரை: இரவிவன்மன்புத்திரி; இலக்குமி, தாரையென்பவரின் ஸகோதரி; துச்சயராசன்மனைவி.

